குமரன்
ஆரம் 16, முத்து 31
March 16, 1939

Record no. 313

*Kumaraṉ*

*Āram 16, muttu 31*

*March 16, 1939*

Record no. 313

REG NO M. 1823. KUMARAN WEEKLY. TELEPHONE டெலிபோன் 40

சந்தா விவரம்

உள்நாடு வருஷம் ஒன்றுக்கு ரூ. 5–0–0
ஆறு மாதம் 3–0–0
சிலோன் ரூ. 6–0–0
பர்மா, மலாய் முதலிய வெளிநாடு ஷ 1-க்கு ரூ. 7–0–0

# குமரன்



வியாழன்தோறும் வெளிவரும் — மாதப் பதிப்பும் சேர்ந்தது. — PUBLISHED EVERY THURSDAY.

ஆரம் 16. காரைக்குடி, வெகுதானிய-ஷ பங்குனி-மீ 3-உ (16—3—39) முத்து 31.

திரிபுரியில், மார்ச் 10உ ஆரம்பமான, இந்திய தேசீய காங்கிரஸ் 52 வது மகாநாட்டில் ஸ்ரீ சுபாஷ் போஸ் நிகழ்த்திய தலைமை உரையின் முக்கிய பகுதிகள் வருமாறு:—

### காந்திஜி வெற்றி

நண்பர்களே, நான் வேறு விஷயங்களைப்பற்றிப் பேசுமுன் காந்திஜி ராஜகோட்டுக்குச் சென்றதன் நோக்கம் ஈடேறி அதன் பலனை அவரது உபவாசம் முடிவுற்றதுபற்றி நாம் விசேஷ மகிழ்ச்சியடைந்திருப்பதைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

ஸ்ரீ சுபாஷ் சந்திர போஸ்

இவ்வருஷம் பல அம்சங்களில் விசேஷமானதாயிருக்குமெனத் தோன்றுகிறது. இவ்வருஷத்திய தலைவர் தேர்தல், வழக்கமாயுள்ளதைப் போன்றதல்ல. தேர்தலுக்குப் பின் நிலைமையில் திடுக்கிடத் தக்க மாறுதல்கள் ஏற்பட்டு இறுதியாக, காரியக் கமிட்டி அங்கத்தினர்களான 15 பேரில் சர்தார் படேல், மௌலானா ஆஸாத், டாக்டர் ராஜேந்திர பிரசாத் முதலிய 12 பேர் ராஜிநாமா செய்து விட்டார்கள். அக்கமிட்டியைச் சேர்ந்த இன்னொரு பிரபலஸ்தரான பண்டித நேரு சம்பிரதாய முறையில் ராஜினாமா செய்யவில்லையாயினும் அவர் ராஜினாமா செய்து விட்டதாகவே அனைவரும் எண்ணத்தக்கவாறு ஒரு அறிக்கை விடுத்தார். திரிபுரக் காங்கிரஸ் கூடவிருந்த சமயத்தில் ராஜ்கோட் நிகழ்ச்சிகள் காரணமாக காந்திஜி உபவாசம் துவக்க நேர்ந்தது. இத்துடன் நான் ஒரு நோயாளியாகவே திரிபுரத்துக்கு வந்து சேர்ந்தேன். எனவே இவ்வருஷம் அக்கிராசனப் பிரசங்கம் இதற்கு முன்னையப் பிரசங்கங்களை விட மிகவும் சுருக்கமாக விருப்பது முற்றிலும் பொருத்தமானதே யாகும்.

திரிபுரம் காங்கிரஸ்

## ஸ்ரீ சுபாஷ் பாபு தலைமைப் பிரசங்கம்

### பிரிட்டிஷ் சர்க்காருக்கு இறுதி எச்சரிக்கை

### இணங்காவிட்டால் சத்தியாக்கிரகம் ஆரம்பிக்கவேண்டும்

### சர்வதேச நிலைமை

நாம் சென்ற வருஷம் பிப்ரவரி மாதத்தில் ஹரிபுராவில் கூடியதற்கப்பால் சர்வதேச நிலைமையில் பல முக்கியமான நிகழ்ச்சிகள் ஏற்பட்டிருக்கின்றன. அவைகளில் முக்கியமானது சென்ற செப்டம்பர் மாதத்தில் ஏற்பட்ட மியுனிச் ஒப்பந்தமாகும். அதன் மூலம் பிரான்ஸும் பிரிட்டனும் நாஸி ஜெர்மனியிடம் சரணாகதியடைந்து விட்டன. இதன் பலனாக ஐரோப்பாவில் இதுகாறும் பிரான்ஸ் வகித்து வந்த முதன்மை ஸ்தானத்தை ஒரு குண்டுகூடச் சுடாமல் ஜெர்மனி கைப்பற்றிக் கொண்டுவிட்டது. சமீபத்தில் ஸ்பானியக் குடியரசு குலைந்தது காரணமாக பாஸிஸ்ட் இத்தாலி, நாஸி ஜெர்மனி இவற்றின் மதிப்பு இன்னும் உயர்ந்திருப்பதாகத் தோற்றுகிறது. ஐரோப்பிய அரசியலினின்றும் ரஷ்யாவை தற்காலிகமாக ஒதுக்க பிரிட்டனும் பிரான்ஹும் ஜெர்மனியுடனும் இத்தாலியுடனும் சேர்ந்து சதி செய்து வருகின்றன. ஆனால் அது எவ்வளவு காலம் சாத்தியமாயிருக்கக்கூடும்? ரஷ்யாவை அவமானப்படுத்த முயன்றதன் மூலம் பிரிட்டனுக்கும் பிரான்ஸுக்கும் என்ன லாப மேற்பட்டிருக்கிறது? சர்வதேச நிலை சரியாக வில்லாமையால் ஏகாதிபத்தியத்தின் அந்தஸ்தும் பலமும் குறைந்துவிட்டன.

### சுயராஜ்யப் பிரச்னை

நாம் சுயராஜ்யப் பிரச்னையை வற்புறுத்தி தேசிய கோரிக்கையை எடுத்துச்சொல்லவேண்டும். பிரிட்டிஷ் கவர்ன்மெண்டாருக்குத் தவணை கொடுத்து இறுதிக் கடிதம் விடுக்க வேண்டுமென நான் பலநாளாகச்சொல்லிவருகிறேன். சமஷ்டியை நம்மீது கொண்டுவந்து சுமத்தும் வரை நாம் பொறுத்திருக்க முடியாது. இன்னும் சில வருஷங்கள் வரை ஐரோப்பாவில் நிலைமை சீர்ப்பட வேண்டுமென எதிர்பார்த்து சமஷ்டியைக் கொண்டுவராமல் சற்று நழுவ விட்டால், நாம் என்ன செய்ய வேண்டுமென்பதை எண்ணிப் பார்க்க வேண்டும். ஐரோப்பாவில் சமாதான நிலை நிரந்தரமாக ஏற்பட்டுவிட்டால், கிரேட் பிரிட்டன் ஏகாதிபத்யக் கொள்கையைக் கடுமையாக அநுஷ்டிக்கும். பாலஸ்தீனத்தில் அராபியர்களைச் சரிப்படுத்த ஒரு சமரஸ ஏற்பாடு செய்து வருகிறார்கள். அதற்கு சர்வதேச நிலைமை சரியாக வில்லாமையே காரணம்.

### இறுதி எச்சரிக்கை

ஆகவே இந்த சமயத்தில் நாம் சற்று தவணை கொடுத்து பிரிட்டிஷ் கவர்ன்மெண்டாருக்கு இறுதிக் கடிதம் அனுப்பி நமது கோரிக்கைகளை நிறைவேற்றும்படி சொல்லவேண்டும். குறித்த தவணைக்குள் பதில் வராவிட்டாலும் சரி, அதிருப்தியான பதில் வந்தாலும் சரி, நாம் தேசியக் கோரிக்கையை வற்புறுத்த நமது பலத்தை உபயோகிக்கலாம். இன்று நாம் செய்யக்கூடியது பொதுஜன சட்டமறுப்பு இயக்கம் அல்லது சத்தியாக்ரகம். நீண்டகாலத்திற்குநடக்கும் ஒருபெரிய அகில இந்திய சத்யாக்ரகத்தை பிரிட்டிஷ் சர்க்கார் இன்று எதிர்த்து நிற்க விரும்பவில்லை. பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தை எதிர்க்க இன்னும் காலம் வரவில்லை என்று நினைப்பவர்கள் காங்கிரஸில் இருப்பதுபற்றி நான் வருந்துகிறேன். ஆனால் நிலைமையை நன்கு பரிசீலனை செய்து பார்க்கையில் அவ்விதம் செய்வதற்கு எதிராக யாதொரு தடையையும் நான் காணவில்லை. எட்டு மாகாணங்களில் காங்கிரஸ் சர்க்கார் இருந்து வருவதால் நமது தேசிய ஸ்தாபனத்தின் பலமும் கௌரவமும் அதிகரித்திருக்கின்றன. நமது பொதுஜன இயக்கம் பிரிட்டிஷ் இந்தியாவில்

(14-ம் பக்கம் பார்க்க)

## சென்னை ரேடியோ

(மார்ச் 16உ முதல் 23உ வரை)

[மீடியம் வேவ்லெங்த் 211 மீட்டர்கள்
* இக் குறியிட்டவை 60.98 மீட்டர்கள்]

### மார்ச்சு 16உ வியாழன்

மாலை
4-00 கல்வி ஒலிபரப்பு—குழந்தைகளுக்கு.
5-00 சந்திரஹாஸ உபாக்கியானம்-தமிழ் காலக்ஷேபம்—ஸ்ரீ டி. கே. சந்தரேசன்.
6-00 கிராமபோன் ரிகார்டுகள்.
* 6-00 அ. இ. ரே. பாடகர்கள்—கோஷ்டிப் பாட்டு.
* 6-05 நடப்பு விலைவாசிகள்.
* 6-10 தமிழில் சிறு கதை.
* 6-20 ஸ்ரீமதி ஜானகியும் ஸ்ரீ வெங்கடேசனும்—இசைப்பாட்டுகள்.
6-30 ஸ்ரீ டி. எஸ். வெங்கடாச்சாரி வாய்ப்பாட்டு.
7-00 அ. இ. ரே. வாத்தியக் கோஷ்டி—சரஸ்வதி.
7-05 "அதிர்ஷ்டம்"—தமிழ் நாடகம் அ. இ. ரே. நடிகர்கள்.
7-30 ஸ்ரீ வெங்கடாச்சாரி வாய்ப்பாட்டு.
8-00 ஸ்ரீமதி வி. மீனாக்ஷி-வாய்ப்பாட்டு.
8-30 பல்லடம் ஸ்ரீ சஞ்சீவி ராவ் புல்லாங்குழல் (ரிகார்டுகள்)
9-20 ராஜதந்திரம்-ஆங்கிலப் பேச்சு-எப். இ. ஜேம்ஸ்.
9-35 ஐரோப்பிய சங்கீதம்.
* 9-35 ஸ்ரீ கே. வெங்கடசாமிராஜு கோட்டு வாத்தியம்.

★

### 17உ வெள்ளி

பகல்
2-00 கல்வி ஒலிபரப்பு—பள்ளிக்கூடங்களுக்கு.
மாலை
5-00 ஸ்ரீ மாதிரிமங்கலம் நடேசய்யர் ரிகார்டுகள்.
5-15 புதுக்கோட்டை ஸ்ரீ சுப்பிரமணிய ஐயர் புல்லாங்குழல்.
6-00 கிராமபோன்—ரிகார்டுகள்.
* 6-15 குமாரி வரலக்ஷ்மி-வாய்ப்பாட்டு.
6-30 ஸ்ரீ பி. டி கிருஷ்ணமூர்த்தி நாயுடு வாய்ப்பாட்டு.
7-15 "பணம்"—ஸ்ரீ வி. ஆர். சீனிவாசன் பிரசங்கம்.
7-15 பாலையூர் ஸ்ரீ. கே. வெங்டராமய்யர்-வாய்ப்பாட்டு.
9-20 உபத்திரவம்—இது பொது கடமையா?—ஸ்ரீ கே. பாஷ்யம் ஆங்கிலப் பிரசங்கம்.
9-35 ஸ்ரீ வி. பாலகிருஷ்ண பிள்ளை—பிடில்.
* 9-35 ஐரோப்பிய சங்கீதம்.

★

### 18உ சனி

மாலை
5-00 அ. இ. ரே. வித்வான்-புல்லாங்குழல்
5-15 ஸ்ரீ பி. கே. ராமசாமி அய்யர் வாய்ப்பாட்டு.
5-45 அ. இ. ரே. வாத்தியகோஷ்டி-ஆரபி
6-00 கிராமபோன் ரிகார்டுகள்
* 6.00 திருப்புகழ்
* 6-05 நடப்பு விலை வாசிகள்
* 6-10 கோழிப்பண்ணை-தமிழ்ப் பேச்சு
6-30 மருத்துவக்குடி ஸ்ரீ எஸ். ராஜகோபாலய்யர்-வாய்ப்பாட்டு
7-30 டாக்கி பாட்டுகள்-மிஸ். செல்லம்-ரிகார்டுகள்
7-45 ஸ்ரீ எஸ். ராஜகோபாலய்யர்-வாய்ப்பாட்டு
8-30 சங்கீதம் ஸ்ரீமதி ஜானகியம்மாள்-ரிகார்டுகள்
9-20 (சங்கீத ஞானமற்றவன்-ஆங்கில ஹாஸ்யம்) பீட்டர்டன்
9-35 ஐரோப்பிய சங்கீதம்
* 9-35 ஸ்ரீமதி செல்லம்மாள்-வாய்ப்பாட்டு (ரிகார்டுகள்)
* 10-05 பலவகை பாட்டு (ரிகார்டுகள்)

★

### 19உ ஞாயிறு

மாலை
5-00 சேலம் ஸ்ரீ ஜி. தேசிகன்-வாய்ப்பாட்டு
5-30 அ. இ. ரே. வாத்தியகோஷ்டி
5-35 ஸ்ரீ வி. வெங்கட்ராமன்-வாய்ப்பாட்டு
6-00 சேலம் ஸ்ரீ தேசிகன்-வாய்ப்பாட்டு
6-30 குண்டுசி- ஒரு தமிழ் ஹாஸ்யம் (அ. இ. ரே. நடிகர்கள்)
7-00 ஸ்ரீ வெங்கட்ராமன்-வாய்ப்பாட்டு
7-30 ஸ்ரீமதி வி. எஸ். கல்பகம்-வாய்ப்பாட்டு
8-10 காலஞ்சென்ற ஸ்ரீமதி தனம்மாள் வீணை (கிராமபோன் ரிகார்டுகள்)
9-20 மதராஸில் நூற்றலும் நெய்தலும்-ஆங்கிலப்பேச்சு-ஸ்ரீஜி.பார்த்தசாரதி
9-35 அ. இ. ரே. வித்வான்-ஜலதரங்கம்
9-50 ஸ்ரீ கே. பி. சுப்பிரமணியபிள்ளை-புல்லாங்குழல்

★

### 20உ திங்கள்

பகல்
2-00 கல்வி ஒலிபரப்பு-பள்ளிக்கூடங்களுக்கு
மாலை
4-00 குழந்தைகளுக்கு
5-00 ஸ்ரீ டி. டி. திருமலாச்சாரி-வாய்ப்பாட்டு
5-45 அ. இ. ரே. வாத்தியக்கோஷ்டி-தேவகாந்தாரி
6-00 டாக்கி பாட்டுகள்-ரிகார்டுகள்
* 6-15 ஸ்ரீ மஹா பாகவதத்திலிருந்து
6-30 ஸ்ரீ டி. முத்தாராமன்-வாய்ப்பாட்டு
7-15 கவி-நாமக்கல் ஸ்ரீ ராமலிங்கம் பிள்ளை-தமிழ்ப் பேச்சு
7-30 ஸ்ரீ என்.-பத்மாவதி-வாய்ப்பாட்டு
8-15 அ. இ. ரே. வித்வான்-புல்லாங்குழல்
8-25 ஸ்ரீ எஸ். டி. விசுவநாதன்-வீணை
9-20 உதகமண்டலம்-மேஜர் ஸ்ரீ ஆர். கே. அய்யங்கார்-ஆங்கிலப்பேச்சு
9-35 ஐரோப்பிய சங்கீதம் ஒரு கதா காலக்ஷேபம்
* 9-35 ஸ்ரீ விஸ்வநாதன் வீணை

★

### 21உ செவ்வாய்

மாலை
5-00 எஸ். எஸ். எம். ஜெயராம் செட்டி-வாய்ப்பாட்டு
5-30 ஸ்ரீ வீ. என். கன்னியப்பன்-புல்லாங்குழல்
6-00 ஸ்ரீ எம். என். அம்பிகாபதி-வாய்ப்பாட்டு
* 6-00 சித்தர் பாடல்
* 6-05 நடப்பு விலைவாசிகள்
* 6-10 தேக்குமரம் பயிர் செய்தல்-தமிழ் பேச்சு
* 6-20 அ. இ. ரே. பாடகர்கள்-பஜனை
6-30 மஹா ராணா பிரதாப் (அஞ்ஞாத வாசம்)-அ. இ. ரே. நடிகர்கள்
6-50 ஸ்ரீ கன்னியப்பன்-புல்லாங்குழல்
7-30 நந்திவாடி ஸ்ரீ கே. முத்துஸாமி அய்யர்-வாய்ப்பாட்டு
8.00 கோஷ்டிப் பாட்டுகள்-ரிகார்டுகள்
8-00 மைசூர் ஸ்ரீ ஆர். கே. வெங்கட்ராம சாஸ்திரி-பிடில்
9-20 தைரிய மின்மை-ஆங்கிலப் பேச்சு—டி. ஆர். பவுல்கர்
9-35 ஐரோப்பிய சங்கீதம்
* 9-35 செம்மங்குடி ஸ்ரீ ஆர். சீனிவாசய்யர்-ரிகார்டுகள்
* 10-05 நாச்சியார் கோயில் ஸ்ரீ நாராயண அய்யங்கார்கோட்டு வாத்தியம் ரிகார்டுகள்

★

### 22உ புதன்

மாலை
4-00 குழந்தைகளுக்கு
5-00 ஸ்ரீ டி. ஜெயராமன்—வாய்ப்பாட்டு
5-30 ஸ்ரீமதி டப்ளியூ. எஸ். ம்யூரேல்—வாய்ப்பாட்டு
6-00 ஸ்ரீ ஜெயராமன்—வாய்ப்பாட்டு
6-30 ஸ்ரீமதி ராஜேஸ்வரி கோவிந்தராஜ் வீணையும் வாய்ப்பாட்டும்
7-15 "அதனுல் உண்டாகும் பயன்"—"சாணக்கியர்" தமிழ்ப் பேச்சு
7-30 ஸ்ரீமதி சகுந்தலாபாய்-வாய்ப்பாட்டு
8-05 டாக்கிபாட்டுகள் (ரிகார்டுகள்) (அம்பிகாபதி)
8-20 மதுரை ஸ்ரீ மணி அய்யர்—வாய்ப்பாட்டு
9-20 மூர் ஜனங்கள்—இ. ஜே. பிங்கிள் ஆங்கிலப் பேச்சு
9-35 அ. இ. ரே. வித்வான்கள்—பிடில்
9-50 மதுரை ஸ்ரீ மணி அய்யர்—வாய்ப்பாட்டு

★

### 23உ வியாழன்

மாலை
4-00 குழந்தைகளுக்கு
5-00 வாலாஜாபேட்டை ஸ்ரீ எம். சுப்பிரமணிய முதலியார்-வாய்ப்பாட்டு
5-45 அ. இ. ரே. வாத்தியக் கோஷ்டி—ஸாவினி
6-00 ஹிந்துஸ்தானி ரிகார்டுகள்
*6-00 தேவாரம்
* 6-10 ஆடு மாடுகளுக்கு வரும் தொத்து நோய்—தமிழ்ப் பேச்சு
* 6-20 ஸ்ரீமதி வி. எஸ். ராஜமும் ஸ்ரீ ஜி எஸ். விஜயராவும்—இசைப் பாட்டு .
6-30 ஸ்ரீ ஜகன்னதம் பிள்ளையும் கோஷ்டியும்—நாகஸ்வரம்
7-00 வரவு செலவு கணக்கு—தமிழ் விவாதம் (அ. இ. ரே. நடிகர்கள்)
7-30 ஸ்ரீமதி குசலம் ஹரன்
8-15 ஸ்ரீ ஜகன்னதம் பிள்ளை கோஷ்டி நாகஸ்வரம்
9-20 இங்கிலாந்தின் மனப் போக்கு—பி. பி. வி. புரோகிராம்—ரிகார்டு
9-50 ஐரோப்பிய சங்கீதம்
* 9-50 ஸ்ரீ எம். ஆர். சுப்ரமண்யர்-வாய்ப்பாட்டு.

★

[குறிப்பு:—தினமும் இரவு 9 மணிக்கு வர்த்தமானமும் வானிலை அறிக்கையும். 9-15 மணிக்கு உள்ளூர் வர்த்தமானமும் அறிக்கையும். 10-30 க்கு நிகழ்ச்சிகள் முடிவடையும்.]



## ரயில் வண்டிப் போக்கு வரத்து

| வண்டியின் நிர். .... | 25 | 1 | 67 | 33 | 29 | 31 | 7 |
|---|---|---|---|---|---|---|---|
| திருச்சி புறப்படும் நேரம் | 3-57 | 7-30 | 10-20 | — | 13-15 | 17-25 | 22-15 |
| புதுக்கோட்டை ஷை | 5- 6 | 8-41 | 12- 0 | — | 14-37 | 18-58 | 23-40 |
| நமுனசமுத்திரம் ஷை | 5-17 | 8-52 | 12-10 | — | 15-0 | 19-9 | — |
| திருமயம் | 5-31 | 9-8 | 12-23 | — | 15-13 | 19-23 | 0- 3 |
| காரைக்குடி ஷை | 6-15 | 10- 1 | 13-2 | 14- 5 | 16-24 | 20-35 | 0-50 |
| தேவகோட்டை ரோடு | 6-25 | 10- 9 | — | 14-13 | 16-32 | 20-43 | — |
| நாட்டரசன்கோட்டை | 7-13 | 10-48 | — | 14-59 | 17-18 | 21-25 | 1-45 |
| சிவகெங்கை ஷை | 7-25 | 10-59 | — | 15-19 | 17-34 | 21-36 | 1-57 |
| மானாமதுரை சேரும் நேரம் | 8- 2 | 11-31 | — | 15-56 | 18 10 | 22-10 | 2-30 |

| வண்டியின் நிர். .... | 288 | 282 | 290 | 546 | 284 | 286 |
|---|---|---|---|---|---|---|
| மானாமதுரை புறப்படும் நேரம் | 23-13 | 18-40 | 16-20 | 14-50 | 11-52 | 8-24 |
| மதுரை சேரும் நேரம் | 0-32 | 20- 0 | 17-54 | 16-10 | 13-15 | 9-38 |

| வண்டியின் நிர். .... | 287 | 289 | 545 | 281 | 285 | 283 |
|---|---|---|---|---|---|---|
| மதுரை புறப்படும் நேரம் | 1-10 | 6-42 | 10-33 | 13-20 | 15-28 | 17-10 |
| மானாமதுரை சேரும் நேரம் | 2-24 | 7.55 | 11-45 | 14-33 | 16-46 | 18-24 |

| வண்டியின் நிர்..... | 32 | 68 | 30 | 2 | 34 | 26 | 8 |
|---|---|---|---|---|---|---|---|
| மானாமதுரைபுறப்படும்நேரம் | — | 8-12 | 12-15 | 14-47 | 17- 0 | 18-50 | 23- 6 |
| சிவகெங்கை ஷை | — | 8-46 | 12-51 | 15-18 | 17-35 | 19-24 | 23-38 |
| நாட்டரசன்கோட்டை ஷை | — | 8-57 | 13- 2 | 15-30 | 17-46 | 19-35 | 23-50 |
| தேவகோட்டை ரோடு ஷை | — | 9-42 | 13-49 | 16-14 | 18-32 | 20-16 | — |
| காரைக்குடி ஷை | 6-45 | 10--3 | 14- 6 | 16-32 | 18-45 | 20-36 | 0-58 |
| திருமயம் ஷை | 7-24 | 10-38 | 14-44 | 17-9 | — | 21-11 | 11-36 |
| நமுனசமுத்திரம் ஷை | 7-38 | 10-51 | 14-58 | 17-24 | — | 21-25 | — |
| புதுக்கோட்டை ஷை | 7-53 | 11-6 | 15-13 | 17-48 | — | 21-42 | 2- 4 |
| திருச்சி சேரும் நேரம் | 9-30 | 12-30 | 16-45 | 19- 0 | — | 22-58 | 3-28 |

குறிப்பு:—33—29-நிர். இரண்டு வண்டிகளும் நேரே மதுரை ஜங்ஷனுக்குப் போகின்றன. 26—8-நிர். இரண்டு வண்டிகளும் நேரே திருச்சி-கார்டு லயன் வழியாக சென்னை எழும்பூர் போகின்றன.

## கப்பல் செய்திகள்

### நாகபட்டினத்திற்கும் பினங்குக்கும் (ஏஜெண்டிடமிருந்து) வருதல்

கப்பல்கள், மலாய் நாட்டிலிருந்து நாகபட்டணத்துக்கு வரும் தேதி வருமாறு:—

தலாம்பா 8018 டன் 16—3—39
ரஜுலா 8478 டன் 30—3—39
தலாம்பா 8018 டன் 13—4—39
ரஜுலா 8478 டன் 27—4—39

### புறப்படுதல்

கப்பல்கள் நாகபட்டணத்திலிருந்து மலாய் நாட்டுக்குப் புறப்படும் விவரம் வருமாறு:—

தலாம்பா 8018 டன் 25—3—39
ரஜுலா' 8478 டன் 8—4—39
ரோணு 8602 டன் 22—4—39
ரஜுலா 8478 டன் 6—5—39

### பிரஞ்சு மெயில்

புதுச்சேரியிலிருந்து சிங்கப்பூர், சைகோன் புறப்படும் கப்பல்கள்:-

போர்தோஸ் 19000 டன் 11—4—39
ஆந்திரே லெபோன் 20,000 டன் 8—5—39
தர்தாஞான் 21000 டன் 5—6—39

பிரெஞ்சு-மெயில் விவரங்களுக்கு:
H. B. ஹூசேன் & சன்ஸ்,
கப்பல் ஏஜண்டுகள், புதுச்சேரி.

### P. & O. மெயில்

கொழும்பிலிருந்து, நேராக பினங்குக்குப் புறப்படும் கப்பல்களின் விவரம் வருமாறு:—

சித்ரல் 15000 டன் 19—3—39
கார்தேஜ் 15,000 டன் 2—4—39
ராஜபுதானா 17,000 டன் 16—4—39



திரிபுரம் காங்கிரஸ் — வரவேற்பு உரை

# இந்தியாவின் ஸ்டாலின் மகாத்மா

## இன்றைய காங்கிரஸ் அவருடைய சிருஷ்டியே

## பாதி ஆற்றில் குதிரையை மாற்றலாமா?

திரிபுரம் காங்கிரஸில், பிரதிநிதிகளை வரவேற்று, வரவேற்புத் தலைவர் ஸ்ரீ சேத் கோவிந்ததாஸ் நிகழ்த்திய பிரசங்கத்தின் சுருக்கம் வருமாறு:—

உலகம் பூராவிலும் இப்போது ஒரு நெருக்கடி குமுறிக்கொண்டிருக்கிறது. எந்த நிமிஷத்திலும் ஒரு உலக யுத்தம் ஏற்படலாமென்று தோன்றுகிறது. அந்த சமயத்தில் நாம் விரும்பினுல்கூட, பூராவும் ஒதுங்கி நிற்கமுடியாது. அத்தகைய யுத்தம் ஏற்பட்டால் இந்தியாவின் நிலைமை என்ன? இதற்கு நாம் ஒருபுறம் இங்கிலாந்து, பிரான்ஸ், மற்றொருபுறம் ஜெர்மனி, இத்தாலி, இன்னொரு புறம் அமெரிக்கா, ஜப்பான் ஆகிய நாடுகளின் நிலைமை என்னவென்பதை பரிசீலனை செய்ய வேண்டும்.

அபிசீனியாவை இத்தாலி பிடித்துக் கொண்ட பிறகு, நமக்கும் புதிய இத்தாலிய சாம்ராஜ்யத்திற்கு மிடையே இருப்பது அராபிக் கடல் மாத்திரம் தான். இத்தாலிக்கும், ஜெர்மனிக்கும் இப்போது ஸ்பெயினில் இடம் கிடைத்துவிட்டது. ஆகவே, மத்தியதரக் கடல் பாதை முன்போல பிரிட்டனுக்கு அவ்வளவு சுலபமாயிராது. எப்போதாவது யுத்தம் ஏற்பட்டால், உடனே துருப்புகளெல்லாம் ஐரோப்பாவுக்கு அனுப்பப்படுகின்றன. வெளியிலிருந்து யாராவது படையெடுத்து வந்தால், இந்தியாவின் தற்காப்புக்கு ஒன்றுமில்லை.

### இந்தியாவுக்கு ஆபத்து ஜப்பான்தான்

இப்போது ஜப்பானிலிருந்துதான் நமக்கு ஆபத்து. சென்ற யுத்தத்தின் போது ஜப்பான் ஒதுங்கியிருந்தது. ஆனல், இப்போது ஜப்பானின் மனப்பான்மை மாறிவிட்டதாகத் தோன்றுகிறது. ஜப்பானிடமுள்ள பயத்தினுல்தான், செக்கோஸ்லவேகியா பலி கொடுக்கப்பட்டதென்று கூட சில அமெரிக்க பத்திரிகைகள் சொல்லியிருக்கின்றன. செக்கோஸ்லவேகிய பிரச்னையில் இங்கிலாந்து ஜெர்மனிமீது போர் தொடுத்தால் உடனே ஆஸ்டிரேலியா மீதும், இந்தியா மீதும் ஜப்பான் படை யெடுக்குமென்று பிரிட்டிஷ் ஒற்றர்கள் ஸ்ரீ சேம்பர்லேனுக்கு தகவல் கொடுத்தார்களென்றும், இதற்கு பயந்துதான் அவர் மூனிச்சுக்கு ஓடி ஹிட்லருக்கு பணிந்தாரென்றும் சொல்லப்படுகிறது.

### ஜனத் தொகை பிரச்னை

ஜன நெருக்கத்தைக் குறைப்பதற்கு மேற்கொண்டு நாடுகள் வேண்டியிருப்பதால், ஜப்பான், இத்தாலி, ஜெர்மனி மூன்று நாடுகளும் யுத்த மோகத்தில் இருப்பதாகச் சொல்லப்படுகிறது. இப்படிப் பார்க்கும்போது இந்தியாவின் தேவைதான் அதிகமானது. இந்திய ஜனத்தொகை வரவர அதிகமாய்க் கொண்டே வருகிறது. ஆனல், இதர நாடுகளில் இந்தியர்களுக்கு இடம் கிடைப்பதில்லை. சென்ற ஒரு நூற்றுண்டாக, இந்தியர்கள் வெளிநாடுகளில் குடியேறி, தங்களுடைய நெற்றி வேர்வை நிலத்தில் விழ வேலை செய்து அந்நாடுகளை சுபிட்சமாக்கி யிருக்கிருர்கள், ஆனல், இந்த இடங்களில்கூட இந்தியர்களுக்கு நிம்மதி கிடையாது.

### இன்றைய தேவை என்ன?

எங்கு திரும்பினுலும் கஷ்டங்கள் தான் நம் முன் நிற்கின்றன. தேசபக்தியும், அரசியல் சாமர்த்தியமும், திறமையான தலைவரும் தான் இப்போது நம்முடைய அத்தியாவசியமான தேவைகள். நம்முடைய சரித்திரத்திலேயே நெருக்கடியான இந்த சமயத்தில், நம்மிடையே சச்சரவுகள் தோன்ற ஆரம்பித்திருப்பது மிகவும் வருந்தத்தக்கது. பாதி ஆற்றைக் கடந்த பிறகு, குதிரையை மாற்ற வேண்டு மென்று நாம் நினைக்க ஆரம்பித் திருக்கிறோம். விடுதலைப்போராட்டத்தை நடத்துவதற்காகவே காங்கிரஸ் மகாசபை ஸ்தாபிக்கப்பட்டது. அவ்வப்போது சர்வாதிகாரிகளின் தலைமையின் கீழ் நாம் போராட்டத்தை நடத்தத் தயங்கிய தில்லை. ஒரு இயக்கத்திற்கும் மற்றொரு இயக்கத்திற்கு மிடையே யுள்ள சாதாரண காலங்களில்கூட நாம் பூர்ணமாக ஜனநாயக முறைகளைப் பின்பற்ற முடிந்த தில்லை. இங்கிலாந்து தான் ஜனநாயகம் பிறந்த இடமென்று சொல்லப்படுகிறது. அங்குகூட, யுத்த காலங்களில், சர்வாதிகார முறையை அடிப்படையாகக் கொண்டு கூட்டு மந்திரி சபை அமைக்கப்படுகிறது.

### இந்தியாவின் ஸ்டாலின்

ரஷ்ய பொதுவுடைமைக் கக்ஷி, ஜெர்மன் நாஜிக்கக்ஷி, ஆகியவைகளின் கொள்கை பலாத்காரம் என்றாலும், அஹிம்ஸையை அடிப்படையாகக்கொண்ட இந்திய காங்கிரஸ் மகாசபையை, மேற்சொன்ன கக்ஷிகளுடன் ஒப்பிடலாம். இத்தாலியி லிருப்பவர்களெல்லாரும் பாஸிஸ்டுகளல்ல; ஜெர்மனியிலிருப்பவர்கள் யாவரும் நாஜிகளல்ல; ரஷ்யர்கள் எல்லோரும் பொதுவுடைமைக்காரர்களல்ல. இருந்தாலும், அனேகமாக ரஷ்யர்கள், ஜெர்மனியர்கள், இத்தாலியர்கள் யாவருக்கும் தங்கள் கக்ஷிகளில் நம்பிக்கை இருக்கிறது. இந்தியாவிலுள்ள ஒவ்வொருவரும் நாலணு சந்தா செலுத்திய காங்கிரஸ்காரர்களல்ல வென்றாலும், எல்லா இந்தியர்களும் காங்கிரசை ஆதரிக்கிருர்கள். பாஸிஸ்டுகளிடையே முஸோலினியும், நாஜிகளிடையே ஹிட்லரும், பொதுவுடைமைக்காரர்களிடையே ஸ்டாலினும் என்ன ஸ்தானத்தை வகிக்கிருர்களோ அதே ஸ்தானத்தை காங்கிரஸ்காரர்களிடையே மகாத்மா காந்தி வகிக்கிருர். இன்றைய காங்கிரஸ் அவருடைய சிருஷ்டிதான்.

### மகாத்மா காந்தி காங்கிரஸ் சர்வாதிகாரி

காங்கிரஸின் லக்ஷியம், அதை அடையும் மார்க்கம், சத்யம், அஹிம்ஸை கொள்கைகள் யாவும் அவரால்தான் விதிக்கப்பட்டன. சென்ற இருபது வருஷங்களாக நடந்த விடுதலைப் போராட்டங்களெல்லாம் அவரால்தான் ஆரம்பிக்கப்பட்டன. அவரால்தான் நடத்தப்பட்டன. அவருடைய உத்தரவுப்படிதான் நிறுத்தப்பட்டன.

காங்கிரஸின் அமைப்பு விதிகளில் காந்திஜிக் கென்று தனியாக ஒரு ஸ்தானம் இல்லை யென்பது உண்மையே. ஆனல், காந்திஜி யாரை விரும்புகிருரோ, அவரைத்தான் அக்ராசனராகத் தேர்ந்தெடுப்பதென்று இதுவரையில் ஒரு வழக்கம் இருந்துவருகிறதென்பதை யார் மறுக்கமுடியும்? காந்திஜியால் அங்கீகரிக்கப்படுபவர்களைத் தான் காரியக் கமிட்டியில் சேர்த்துக்கொள்வதென்ற சம்பிரதாயம் இருந்து வருவதை யார் மறுக்க முடியும்? சுருக்கச் சொன்னல், மகாத்மா காந்தி தான் காங்கிரஸ். காங்கிரஸுக்கு அவர்தான் சர்வாதிகாரி. காந்திஜி காங்கிரஸைவிடக் கூடப் பெரியவரென்று, சமீபத்தில் ஸ்ரீ ஜவாஹர்லால் நேரு தன் ஐரோப்பிய சுற்றுப் பிரயாணத்தின்போது ஒரு பிரசங்கத்தில் சொல்லியிருக்கிருர். எல்லோருடைய நம்பிக்கையையும் பெற்றல்கூட, இந்தியாவின் தவப் புதல்வனுகிய காந்திஜியின் நம்பிக்கையைப் பெறமுடியாவிட்டால் அது கொடுமையான துர்ப்பாக்கியமாயிருக்கும் என்று காங்கிரஸ் அக்ராசனர் சொன்னது முற்றிலும் சரியே.

### பெடரேஷன் எதிர்ப்பு

பெடரேஷனை எதிர்த்துப் போராடப் போகிறோமென்பது ஏற்கனவே முடிவு செய்யப்பட்ட விஷயம். எப்போது, எந்த முறையில் போராட்டத்தை ஆரம்பிப்பது என்றுதான் முடிவு செய்யவேண்டும். போராட்டம் அஹிம்ஸை முறைப்படியே நடத்தப்படுமென்று நம்புகிறேன். மகாத்மா காந்திதான் அஹிம்ஸையை நமக்கு உபதேசம் செய்த ஆசாரியன். அஹிம்ஸா போராட்டத்தின் முறைகளெல்லாம் அவருக்குத்தான் நன்றுகத் தெரியும். ஆகவே, எப்போது, எப்படி புதிய போராட்டத்தை ஆரம்பிப்பது என்ற விவரங்களையெல்லாம்

(14-ம் பக்கம் பார்க்க)

## நடப்பு வட்டி விகிதங்கள்

| மாதம் | நாள் | சென்னை | ரெங்கூன் | பினங்கு | சிங்கப்பூர் | சைகோன் |
|---|---|---|---|---|---|---|
| ஈஸ்வர மாசி | 30 | 0-7-0 | 0-5-0 | 0-4-0 | 0-4-0 | 0-4-0 |
| பங்குனி | 30 | 0-7-3 | 0-5-0 | 0-4-0 | 0-4-0 | 0-4-0 |
| வெகுதானிய சித்திரை | 31 | 0-7-3 | 0-4-6 | 0-4-6 | 0-4-0 | 0-4-0 |
| வைகாசி | 32 | 0-7-3 | 0-4-0 | 0-4-6 | 0-4-0 | 0-4-0 |
| ஆனி | 31 | 0-6-9 | 0-4-0 | 0-4-6 | 0-4-0 | 0-4-0 |
| ஆடி | 32 | 0-6-3 | 0-4-0 | 0-4-6 | 0-4-0 | 0-4-0 |
| ஆவணி | 31 | 0-6-3 | 0-4-0 | 0-4-6 | 0-4-0 | 0-4-0 |
| புரட்டாசி | 30 | 0-6-3 | 0-4-0 | 0-4-6 | 0-4-0 | 0-4-0 |
| ஐப்பசி | 30 | 0-6-3 | 0-4-0 | 0-4-6 | 0-4-0 | 0-4-0 |
| கார்த்திகை | 30 | 0-6-3 | 0-4-0 | 0-4-6 | 0-4-0 | 0-4-0 |
| மார்கழி | 29 | 0-6-0 | 0-4-6 | 0-4-6 | 0-4-0 | 0-4-0 |
| தை | 29 | 0-6-6 | 0-4-9 | 0-4-6 | 0-4-3 | 0-4-0 |

காரைக்குடி நகரசபை

# முனிசிபல் ஆஸ்பத்திரியில் எக்ஸ்ரே

## பள்ளிக்கூடங்களில் உடற்பயிற்சி போதனை

(நமது நிருபர்)

காரைக்குடி முனிஸிபாலிட்டியின் சாதாரணக் கூட்டம் ஒன்று 11-3-39 சனிக்கிழமை மாலை 4½ மணிக்கு சேர்மென் ஸ்ரீ ராய. சொக்கலிங்கன் தலைமையில் கூடியது. ஒன்பது அங்கத்தினர்கள் விஜயம் செய்திருந்தார்கள்.

**பாழுங் கிணறுகள்**

செக்காலேயில் சில இடங்களில் தரை மட்டமாகக் கிணறுகள் பாழடைந்து உபயோகமில்லாம லிருப்பதால் அதை சீர்திருத்தி மூடியோ அல்லது உபயோகத்துக்கு லாயக்குள்ளவையாகவோ செய்ய வேண்டுமென்றும் இன்னும் நகரில் இம்மாதிரி கிணறுகள் இருக்கின்றனவா என்று தெரிந்து அவைகளேயும் இம்மாதிரி சீர்திருத்தம் செய்ய வேண்டுமென்றும் கொண்டு வந்துள்ள கவுன்ஸிலர் ஸ்ரீ சீனிவாசனின் தீர்மானங்கள் நிறைவேறின.

**வரி ரத்து**

கல்லுக்கட்டி மேல்கரையிலுள்ள முனிஸிபல் மார்க்கட் உள்ள இடத்துக்கு வரி விதிக்கக் கூடாதென்றும் டை இடம் முனிஸிபாலிட்டியிடம் குத்தகைக்கு ஒப்படைக்கப்பட்டு வரியை முனிஸிபாலிட்டியே செலுத்திக்கொள்வதென்று கண்டிருப்பதாலும் டை இடத்தை வரி விதிப்பிலிருந்து விலக்க வேண்டுமென்றும் விதித்திருக்கும் வரியை ரத்துச் செய்வதென்றும் முடிவு செய்யப்பெற்றது.

**சேருவைகாரர் ஊருணி மயானம்**

சேருவைகாரர் ஊருணிக்கு அடுத்த மயானத்தை நகரத்தார்களுக்கென்று பிரத்தியேகமாய் ஒதுக்கித் தரவேண்டுமென்று நகர சபையைக் கேட்டுக்கொள்ளும் செட்டியார்கள் நல உரிமைச் சங்கத்தின் தீர்மானம் யோசிக்கப்பெற்று தனியாக நியமிக்கப்பெற்றுள்ள கமிட்டிக்கு அனுப்புவதெனத் தீர்மானிக்கப்பெற்றது.

**நன்கொடைகள்**

முனிசிபல் கே. பி. எம். பார்க்குக்கு 1 டஜன் கான்கிரிட் பெஞ்சு சப்ளை செய்யவும், கல்லயன் ஆசாரி தெருவிலுள்ள பள்ளிக்கூடப் பிள்ளைகள் விளையாடுவதற்கு இங்கிளண்டு பிளானும் ஒரு செட் சோ அவுட்பிட்டும் சப்ளை செய்யவும், சாத்தப்பா பார்க்கில் உள்ள மகாத்மா காந்தியடிகளின் உருவச் சிலைக்கு மேல் ஆர். வி. கனேப்பி ஒன்று அமைத்துக் கொடுக்கவும் ஒப்புக்கொண்டுள்ள முறையே திருவாளர்களான ஆனந்த பவன் பியாரிலால், செ. ராம. பழ. நா. நாராயணன் செட்டியார், சி. மு. அரு. நாராயணன் செட்டியார் ஆகியவர்களின் நன்கொடைகள் வந்தனத்துடன் ஒப்புக் கொள்ளப் பெற்றன.

**வரி விதிப்பு ஸ்பெஷல் ஆபீசர்**

வரி விதிப்பு ரிவிஷனுக்கு ஸ்பெஷல் ஆபீசர் நியமனம் இன்னும் செய்யாததைப் பற்றி பல ரிமைண்டர்கள் எழுதிடம் இன்னும் கவர்ன்மெண்டார் நியமிக்கவில்லையென்றும் முன்சிபல் உத்யோகஸ்தர்களில் ஒருவரை நியமித்தல் லாபகரமாயிருக்கு மென்றும் கொண்டு வந்துள்ள கமிஷனரின் குறிப்புயோசிக்கப்பெற்று 1-4-39 உக்குள்ஸ்பெஷல் ஆபீசர் நியமனம் செய்யப் பெறாவிட்டால் கமிஷனரே டை வேலையைப் பார்ப்பதென முடிவு செய்யப் பெற்றது.

**டிபாஸிட் தொகைகள்**

ஆபீஸ் கட்டுவதற்கு ஒதுக்கப்பட்டிருக்கும் ரூ 13673 மையடம் மதுரை இம்பீரியல் பாங்கில் 25-2-39 முதல் ஒரு வருஷத்துக்கு மறுபடியும் இன்வெஸ்ட் செய்யவும் ஆஸ்பத்திரி கட்டிடம் கட்டுவதற்கு ஒதுக்கப்பட்டிருக்கும் ரூ 9771-10-9ம் கட்டிடத்துக்கு ஒதுக்கப்பட்டிருக்கும் ரூ 5650-12-4 யும் 8-2-39 முதல் மீண்டும் ஒரு வருஷத்துக்கு இம்பீரியல் பாங்கில் டிபாஸிட் செய்வதெனவும் தீர்மானிக்கப்பெற்றது.

**விளம்பர பில்கள்**

வருடாந்தக் குத்தகை விவரங்களை விளம்பரம் செய்ததற்குள்ள பில்கள் சாங்கிஷனுக்கு வந்தன. உள்ளூர் விஸ்வபந்து, குமரன் பத்திரிகைகளில் விளம்பரம் செய்ததற்கு உள்ள, விளம்பரத் தொகைகள் பாதியாகக் குறைக்கப் பெற்றன. ஹிந்து (ரூ 42) தினமணி (ரூ 54) பேப்பர்களின் பில்கள் அப்படியே ஒப்புக் கொள்ளப்பெற்றன.

**சுகாதார நிலையம்**

சொக்கலிங்க சுகாதார நிலையத்தை பொது விசேஷங்களுக்கு அடிக்கடி கேட்கப்படுவதால் நிலைய வேலைகளுக்கு தடங்கலில்லாத முறையில் ரூ 3 வீதம் வாடகை வாங்கிக் கொண்டு விடலாம் என்று தீர்மானிக்கப் பெற்றது.

**சிசு உற்பத்தி நிவாரணம்**

முனிசிபல் ஆஸ்பத்திரியில் சிசு உற்பத்தி நிவாரணப் பிரிவு ஒன்று ஏற்படுத்தவும் அதற்காக ரூ. 100ம் சாங்ஷன் செய்யப்பெற்றது.

**ஆஸ்பத்திரியில் எக்ஸ் ரே**

முனிசிபல் ஆஸ்பத்திரியில் ஒரு எக்ஸ்ரே செக்ஷன் திறக்கலாமென்ற கமிஷனரின் நோட்டு அங்கீகரிக்கப்பெற்று அதற்காக வேண்டிய கருவிகளும் வாங்குவதென்று தீர்மானிக்கப்பெற்றது.

**உடற் பயிற்சி போதனை**

சொக்கலிங்க சுகாதார நிலையத்திலும் முனிசிபல் பள்ளிக்கூடங்களிலும் உடற்பயிற்சி போதனை செய்ய ஆசிரியர் நியமனம் செய்யலாமென்ற கமிஷனரின் குறிப்பு அங்கீகரிக்கப்பெற்றது.

**பிரயாணப்படி பில்கள்**

வழக்கப்படி உள்ள சிப்பந்திகளின் பிரயாணப்படி பில்கள் அங்கீகரிக்கப்பெற்றன. ஆனால் முனிசிபல் இன்ஜினியர் ஸ்ரீ S. L. N. மூர்த்தி சென்னையிலிருந்து வேலை மாற்றத்தில் இங்கு வர பிரயாணப்படி ரூ. 199-12-0ம் ஒத்திவைக்கப்பெற்றது.

**புனராலோசனை இல்லை**

முனிசிபல் இன்ஜினியரை மாற்றும் விஷயமாய் 21-12-38 தேதியுள்ள சர்க்கார் உத்திரவைப் புனராலோசனை செய்ய முடியாதென்ற சர்க்கார் உத்திரவு ரிக்கார்டு செய்யப்பெற்றது.

**மார்க்கெட் குத்தகை**

கல்லுக்கட்டி மேல்கரையிலுள்ள தினசரி மார்க்கட்டை ஸ்ரீ ராம. சொ. சொக்கலிங்கம் செட்டியாருக்கு ரூ 2600க்கு குத்தகை விடுவதென முடிவு செய்யப்பெற்றது. இத்துடன் கூட்டம் முடிந்தது.

---

பிரிட்டிஷார் பிராங்கோவை அங்கீகரித்ததைக் கண்டித்து சேம்பர்லேனுக்கு காங்கிரஸ் அக்ராசனர் ஸ்ரீ சுபாஷ் ஒரு தந்தி கொடுத்திருக்கிறார்.











**காங்கிரஸ் நகர்**

திரிபுரத்தில் அமைக்கப்பட்டிருந்த விஷ்ணு தத்த நகரின் விஸ்தீரணம் 250 ஏக்கர். பிரதான வாசலான மதாவத் பார் என்ற வாயிலின் இரு பக்கங்களிலும், தூண்கள் மீது, தேசியக் கொடியை வணங்கும் பாவனையில், ஆணும் பெண்ணுமாக இரு தொண்டர்களின் சிலைகள் ஆள் உயரத்திற்கு அமைக்கப்பட்டிருந்தன. இந்த வாசலைத் தாண்டிச் சென்றால், பிறை வட்டமாக இன்னும் ஐந்து வாசல்கள் அமைக்கப்பட்டிருந்தன. 82 அடி உயரத்தில் ஜண்டா சவுக்கத்தில் தேசியக் கொடி. அதிலிருந்து 200 கஜ தூரத்தில் பொருட்காட்சி மைதானம்.

**வீரர்கள் சவுக்கம்**

கடந்த சட்டமறுப்பு இயக்கத்தில் கலந்து உயிர் நீத்த காங்கிரஸ் வீரத் தியாகிகளின் ஞாபகார்த்தமாகக் காங்கிரஸ் நகரில், தலைவர்கள் முகாமுக்கும் பிரதிநிதிகள் முகாமுக்கும் மத்தியில் 'வீரர்கள் சவுக்கம்' ஒன்று அமைக்கப்பட்டிருந்தது. அதோடு தீபாலங்காரத்துடன் சோபிக்கும் அழகிய நந்தவனமொன்றும் அமைக்கப்பட்டிருந்தது. காங்கிரஸ் நகருக்கு வருபவர் எல்லோரும், இங்கு விஜயஞ்செய்து வணக்கம் செலுத்திவிட்டுச் சென்றனர்.

**தலைவர்கள் வருகை**

மார்ச் 5உ முதலே பல மாகாணங்களிலிருந்தும் தலைவர்கள் வந்தவண்ணமாயிருந்தனர். சென்ற காங்கிரஸுக்கு விஜயஞ் செய்த மூன்று ஜப்பானிய பொங்கிகள், இவ்வருஷமும் திரிபுரிக்கு வந்தார்கள். ராம் நகர் குன்றின் அடிவாரத்தில் தேசியக் கொடியின்கீழ் இவர்கள் பிரார்த்தனை நடத்தினார்கள். பண்டித ஜவஹர், குமாரி இந்திரா நேரு, மௌலானா அபுல்கலாம் அசாத் முதலியோர் 5ந் தேதியே திரிபுரம் வந்து சேர்ந்தார்கள்.

**ராஷ்டிரபதி வருகை**

தலைவர் ஸ்ரீ சுபாஷ் பாபு தமது உடல் நிலையைக் கூடக் கவனியாமல் 5உ மாலை பர்பாய் மெயிலில் புறப்பட்டு 6-ந்தேதி ஆம்புலன்ஸ் காரில் ஜபல்புரியிலிருந்து திரிபுரம் வந்து சேர்ந்தார். மதன் மகால் ஸ்டேஷனில் எல்லாத் தலைவர்களும் வரவேற்பு கமிட்டியினரால் வரவேற்கப்பட்டனர். ராஷ்டிரபதி வந்து சேர்ந்ததும் சர்தார் வல்லபாய் பட்டேல் உள்பட பல தலைவர்களும் அவருடைய முகாமுக்குச் சென்று க்ஷேமம் விசாரித்தனர்.

**பொருட் காட்சி**

மார்ச் 3உ திரிபுரத்தில் அகில இந்திய கிராமக் கைத்தொழிற் பொருட்காட்சியை மகாத்மா காந்தி திறந்து வைக்க ஏற்பாடாயிருந்தது. ஆனால் ராஜ்கோட் பிரச்னை இதனிடையில் முற்றி, மகாத்மா அங்கேயே தங்கிவிட்டதால், அவர் காங்கிரசுக்கே வரமுடியாது போய்விட்டது ஒரு பெருந் துர்ப்பாக்கியமாகும். 6உ யன்று பண்டித ஜவாஹர்லால் பொருட்காட்சியை திறந்துவைத்தார்.



திரிபுரம் காங்கிரஸ் — மகாநாடு ஆரம்பம்

# திரிபுரத்தில் தேசீய காங்கிரஸ்

## தேக அசௌக்கியத்தால் ஸ்ரீ சுபாஷ் வரவில்லை

### மௌலானா அஸாத் தலைமையில் நடைபெற்ற விவரம்

**மகாத்மாவுக்கு தந்தி**

திரிபுரம் காங்கிரஸுக்கு அவசியம் விஜயஞ் செய்ய வேண்டுமென்று ராஷ்டிரபதி சுபாஷ் பாபு மகாத்மா காந்திக்கு தந்தி அனுப்பியதற்கு மகாத்மாவிடமிருந்து அடியிற்கண்ட பதில் வந்தது; "13-ந் தேதிக்கு முன்னால் ராஜ்கோட்டிலிருந்து பிரயாணப்படலாகாதென்று டாக்டர்கள் சொல்லியிருக்கிறார்கள். டாக்டர்கள் சொல்லை நீங்கள் மீறிவிட்டீர்கள். ஆனால் அவ்வாறு செய்ய எனக்குத் துணிச்சலில்லை."

**மலை சாதியினர் தெருக் கூத்து**

8உ மாலை, திரிபுரத்தில், மத்திய மாகாணத்தைச் சேர்ந்த மலை சாதியினரான கோண்டர்கள் கூட்டமொன்று விசித்திரமான ஆடைகள் அணிந்து கொண்டு, காங்கிரஸ் நகரில் தம்பட்ட மடித்துத் தெருக் கூத்து நடத்தினதை எல்லோரும் வேடிக்கை பார்த்தனர். சிறுவர்கள் சிலர் தலையில் மயில் இறகுகளைக் கட்டிக்கொண்டு ஆடினர்.

**ஊர்வலம்**

மார்ச் 10உ காலை 9-30 மணிக்கு, காங்கிரஸ் அக்கிராசனர் ஊர்வலம் ஆரம்பமாயிற்று. தலைவரின் தேக அசௌக்கியம் காரணமாக அவர் ஊர்வலத்தில் கலந்துகொள்ளவில்லை. அவரது உருவப் படம் ரதத்தில் வைக்கப்பட்டது. படத்தின் இருபக்கத்திலும் வரவேற்புத் தலைவரும், தொண்டர் படைத் தலைவரும் அமர்ந்திருந்தனர். ரதத்தை நன்கு அலங்கரிக்கப்பட்ட 52 யானைகள் இழுத்துச் சென்றன. ஒவ்வொரு யானைமீதும், மாஜி காங்கிரஸ் தலைவரது படமொன்று எடுத்துச் செல்லப்பட்டது. பல்லாயிரக் கணக்கான ஜனங்கள் ஊர்வலத்தில் கலந்துகொண்டனர். ஆண், பெண் தொண்டர்கள் அணிவகுத்துச் சென்றனர்.

**கொடியேற்று விழா**

அன்று காலை ஜண்டா சவுக்கில், பண்டித ஜவஹர்லால் நேரு 2 லட்சம் ஜனங்கள் முன்னிலையில் தேசியக் கொடியை ஏற்றிவைத்தார். அவர் தமது பேச்சில் அடியில் வருமாறு குறிப்பிட்டார்:—

"சில்லறை அபிப்பிராய பேதங்களை மறந்து விடவேண்டும். எந்த நிமிஷத்திலும் போர் வரலாம். அதற்கு நீங்கள் தயாராக இருக்கவேண்டும். காங்கிரஸில் அனைவரும் ஒற்றுமையாகவும் ஒன்றுபட்டும் இருக்கவேண்டும். இதுவே இந்த சமயத்தில் அவசியமாயிருக்கிறது. ஒற்றுமை யில்லையேல் பல வீனமாவது நிச்சயம். நமக்கு பொது விரோதியாகிய பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தைத்தாக்க லாயக்கற்றுப்போய்விடுவோம். எனவே எல்லா பிரதம காங்கிரஸ் சபைகளையும் பலப்படுத்தி ஸ்தல அபிப்பிராய பேதங்களைப் போக்கி பாரத மக்களுக்கு சுயராஜ்யத்தைப் பெறுவதற்காக பொது விரோதியை எதிர்க்கத் தயாராகுங்கள்"

**காங்கிரஸ் ஆரம்பம்**

10உ மாலை காங்கிரஸ் மகாசபை விஷ்ணு தத் நகரில் விசேஷ உற்சாகத்துடன் கூடியது. இரண்டு லட்சம் ஜனங்களுக்கு மேல்கூடியிருந்தனர்.

**உருவச் சிலை**

பிரசங்க மேடையின் ஒரு புறத்தில், கலப்பையுடன் நிற்கும் விவசாயியின் பெரிய உருவச் சிலை யொன்று அமைக்கப்பட்டிருந்தது. அதன் வலது புறத்தில் தலைவர்களுக்கு மேடை போடப்பட்டிருந்தது. பந்தலில் ஆங்காங்கு தனித் தனி மாகாணப் பிரதிநிதிகளுக்கும் விஸிட்டர்களுக்கும் இடம் ஏற்படுத்தப்பட்டிருந்தது. மேடையில் பழய காரியக் கமிட்டி அங்கத்தினர்களும் இதர தலைவர்களும் அமர்ந்திருந்தனர்.

**வந்தேமாதர கீதம்**

பந்தலில் கூடியிருந்த இரண்டு லட்சம் ஜனங்களும் ஏக காலத்தில் எழுந்து நிற்க இளம் பெண்கள் ஆறு பேர் வந்தேமாதர கீதம் படினார்கள்.

**பிரசங்கங்கள்**

பின்னர் வரவேற்புத் தலைவர் ஸ்ரீ சேத் கோவிந்ததாஸ் பிரதிநிதிகளை வரவேற்றுத் தமது உரையை நிகழ்த்திவிட்டு தேக அசௌக்கியம் காரணமாக மகாசபைக் கூட்டத்துக்கு தலைவர் சுபாஷ் பாபு வரமுடியவில்லை யென்றும், அவருக்குப் பதிலாக மாஜி காங்கிரஸ் தலைவர்களில் மூத்தவரான மௌலானா அபுல் காலம் ஆஸாத் தலைமை வகிப்பார் என்று அறிவித்தார். மௌலானா ஆஸாத் தலை தலைமைவகித்து, தலைவர் கூட்டத்திற்கு

(6-ம் பக்கம் பார்க்க)

**நிறைவேறிய தீர்மானங்கள்**

# திரிபுரத்தில் தேசீய காங்கிரஸ்

(5-ம் பக்கத் தொடர்ச்சி)

வாமுடியாமற் போனதற்கு வருத்தந் தெரிவித்தார். தலைவர் கட்டளைப்படி ஆச்சார்ய நரேந்திர தேவ் தலைவர் சுபாஷ் பாபுவின் பிரசங்கத்தை ஹிந்துஸ்தானியிலும், தலைவரின் சகோதரர் ஸ்ரீ சரத் பாபு ஆங்கிலத்திலும் படித்தார்கள். (இரு பிரசங்கங்களும் வெவ்வேறிடங்களில் பிரசுரமாயிருக்கின்றன.)

## ஆசிச் செய்திகள்

காங்கிரஸ் ஆக்டிங் காரியதரிசி ஸ்ரீ நரசிங்கம், பலர் அனுப்பியுள்ள ஆசிச் செய்திகளைப் படித்தார். சீன அபேதவாதக் கட்சி, ஜப்பான் இந்திய தேசியக்கட்சி, ஜான்ஸிபார் இந்திய சங்கம், முதலிய பல ஸ்தாபனங்களும் சீனாவிலுள்ள இந்திய வைத்திய சகாயப்படையிலிருந்தும் இன்னும் பல பிரபலஸ்தர்களிடமிருந்தும் காங்கிரஸுக்கு வாழ்த்துச் செய்திகள் வந்திருந்தன.

## எகிப்தியப் பிரதிநிதிகள்

காங்கிரஸுக்கு விஜயஞ் செய்த எகிப்தியப் பிரதிநிதிகளை பண்டித ஜவஹர்லாலும் வரவேற்புத் தலைவரும் வரவேற்றனர். இவர்களுக்கு தலைவரது மேடையில் ஆசனமளிக்கப்பட்டது. சுபாஷ் பாபுவும், மகாத்மா காந்தியும் இவர்களை வரவேற்றுச் செய்திகள் அனுப்பினர். எகிப்திய பிரதிநிதிகளை வரவேற்றுப் பண்டித ஜவாஹர் பேசினார். எகிப்துப் பிரதிநிதிகளின் தலைவர் தக்கபடி பதிலளித்தார். சென்னை ஸ்ரீ எஸ். சீனிவாசய்யங்கார் பிரதிநிதிகளைச் சென்னைக்கு அழைத்தார். பம்பாய் அலுவல்கள் முடிந்ததும் சென்னைக்கு வருவதாக அவர்கள் தெரிவித்தனர்.

இத்தோடு அன்றைய காங்கிரஸ் கூட்டம் முடிந்தது.

## இரண்டாம் நாள்

காங்கிரஸ் மகாசபைக் கூட்டம் மறுநாள் மாலை 6 மணிக்கு மீண்டும் கூடியது. தலைவர்கள் சற்று தாமதித்தே வந்தனர். அவர்கள் மேடை மீது கூடி முக்கிய விஷயமாகத் தங்களுக்குள் ஆலோசனை செய்தனர். கடைசியாக மௌலானா அபுல்கலாம் அஸாத் மேடைக்கு வந்து, தேக அசௌக்கியம் காரணமாக ராஷ்டிரபதி மகாநாட்டுக்கு வரமுடியவில்லையென்றும், அவரது தேக நிலையைப் பாதிக்கக் கூடிய காரியம் எதுவும் செய்யக்கூடாதென்றும்தெரிவித்தார்,பிறகு பண்டிட் நேரு, ராஷ்டிரபதியின் தேக நிலைபற்றிய டாக்டர்களின் அறிக்கையைப் படித்தார்.

## பண்டிட் பந்தின் தீர்மானம்

அதன் பின், விஷயாலோசனைக் கமிட்டியில் நிறைவேறிய பண்டிட் பந்தின் தீர்மானத்துக்கு ஸ்ரீ ஆனே ஒரு திருத்தத்தைப் பிரேரித்தார். அசல் தீர்மானம் வருமாறு:

> தலைவர் தேர்தல் சம்பந்தமாக ஏற்பட்ட பலவிதத் தப்பபிப்பிராயங்களால் அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி தன் கொள்கையைத் திட்டமாக வெளியிட வேண்டிய அவசிய மேற்பட்டிருக்கிறது. கமிட்டி இதுவரைக் காந்திஜியின் தலைமையில் அனுஷ்டித்த கொள்கையைப் பூரணமாக ஆதரிப்பதோடு இனியும் அவ்விதக் கொள்கையையே அனுஷ்டிக்க வேண்டு மென்றும், சென்றவருஷம் இருந்த காரியக் கமிட்டியிடம் நம்பிக்கை தெரிவிப்பதாயும், அதன் அங்கத்தினர்கள் மீது பழிகூறியதைக் கண்டிப்பதாயும் தெரிவிப்பதுடன், நெருக்கடி ஏற்பட்டுள்ள இச்சமயத்தில் காந்திஜிதான் நாட்டைத் திறம்பட நடத்திச் செல்லக் கூடியவரென்றும் இக்கமிட்டி அபிப்பிராயப் படுகிறது. அதனால், அவரது விருப்பப்படி அடுத்த வருஷக் காரியக்கமிட்டியை அமைக்கும்படி தலைவரை இக்கமிட்டி கேட்டுக் கொள்கிறது.

## ஸ்ரீமான் ஆனே திருத்தம்

தலைவருடைய உடல் நிலை கேவலமாயிருப்பதால், பண்டிட் பந்தின் பிரேரணையை இங்கு விவாதிக்காமல் மற்றொரு நாள் அகில இந்திய காங்கிரஸ் கமிட்டிப் பரிசீலனை செய்யும்படி விட்டுவிட வேண்டுமென்று ஸ்ரீமான் ஆனே ஒரு திருத்தத்தைப் பிரேரித்தார். அது கூடாது என்று பிரதிநிதிகள் சிலர் கோஷமிட்டனர். இதனால் சற்று குழப்பம் ஏற்பட்டு சில நிமிஷ நேரம் வேறு நடவடிக்கை நடக்க முடியாமலிருந்தது. தீர்மானத்தை வாபீஸ் வாங்கிக்கொள்ளுங்கள் என்ற கூக்குரல் அதிகமாயிற்று.

## குழப்பம்

இச்சமயம் பண்டித பந்த்முன் வந்து,ராஷ்டிரபதியின்கேவலமானதேகநிலையைஉத்தேசித்து ஸ்ரீமான் ஆனேயின்யோசனையை அங்கீகரிக்கும்படி கேட்டுக்கொண்டார். தலைவர்களும் இதை ஆதரிப்பதாகக் கூறினர். அதன் பின் மௌலானா அஸாத், திருத்தப் பிரேரணையை ஓட்டுக்கு விட்டு அது நிறைவேறிவிட்டதாகத் தெரிவித்தார். பிரேரணையை வாபீஸ் வாங்கிக் கொள்ள வேண்டுமென்று பிரதிநிதிகள் கூச்சலிட்டனர். வங்காளப் பிரதிநிதிகள் பலர் பிரசங்க மேடையருகில் சென்று 'சுபாஷ் பாபுவுக்கு ஜே சரத் பாபுவுக்கு ஜே, புரட்சி நீடூழி வாழ்க' என்று கோஷமிட்டு குழப்பம் விளைவித்தனர். நிகழ்ச்சிகள் தொடர்ந்து நடக்கமுடியாது போயிற்று.

## பண்டித நேரு கண்டனம்

பண்டித ஜவஹர் மேடைக்கு வந்து, மறுநாள் விஷயாலோசனைக் கமிட்டிப் பந்தலில் ஓட்டுகளைக் கணக்கெடுக்கலாம் என்று கூறினர். கூச்சல் அதிகமாக இருந்ததால் அவர் கூறியதை யாரும் கேட்கவில்லை. அவர் பலமுறை பேச முயன்றும் பேசவொட்டாது கூச்சலிட்டுத் தடுத்தனர்.!! ஒரு மணி நேரம் இந்தக் குழப்பம் நீடித்தது. சிலர் பண்டிதர் முன் முஷ்டியைக் காட்டி யுத்த சமிக்ஞைகூடச் செய்தனராம். இச்சமயம் ஸ்ரீ சரத் பாபு வந்து கேட்டுக்கொண்ட பிறகுதான் வங்கப் பிரதிநிதிகள் தம் இருப்பிடம் சென்றனர். அவர்களுடைய நடத்தையைக் குறித்து பண்டித நேரு, ஸ்ரீ சரத் போஸிடம் கடுமையான வார்த்தைகள் சில கூறிவிட்டுச் சிறிது நேரம் உருக்கமாகப் பேசினர். "இத்தனை வருஷ அனுபவத்தில் இன்று கண்ட காட்சியைப்போல் வேறு கண்டதில்லை. இவ்விதக் காரியங்களிலிருந்து நாம் ஒரு படிப்பினை கற்க வேண்டும். இனி இவ்விதக் காரியம் நடக்க நாம் அனுமதிக்கக் கூடாது. இதனால் காங்கிரஸுக்குப் பாதகம் என்று தெரிந்தும் நாம் இவ்விதக் காரியங்களில் தலையிட்டால் இத்தனை வருஷங்களாக நாம் பட்ட பாடெல்லாம் வீணாகிவிடும்" என்று கூறி முடித்தார்.

## பிரேரணை வாபீஸ்

ஸ்ரீமான் ஆனே எழுந்து அக்கிராசனரின் தேக நிலையில் சிரத்தை கொண்ட வங்க நண்பர்களுக்கும் மற்றவர்களுக்கும் திருப்தி உண்டாக்கும் முக்கிய நோக்கத்துடனேயே இத்திருத்தத்தைக் கொண்டு வந்ததாகவும், தமது தோழர்களிலேயே சிலர் எதிர்ப்பதாலும், குழப்ப மேற்பட்டிருப்பதாலும், தமது பிரேரணையை வாபீஸ் வாங்க அனுமதி தரவேண்டுமென்று கேட்டார். அவரது வேண்டுகோள் ஓட்டுக்கு விடப்பட்டு நிறைவேறியது.

## தீர்மானங்கள்

பின்னர், எகிப்திய தூதுக்கோஷ்டிக்கு நல்வரவு கூறுவதாயும், சீனாவுக்கு அனுதாபம் தெரிவிப்பதாயும் காலஞ்சென்ற தலைவர்களின்-மரணத்துக்கு அனுதாபம் தெரிவிப்பதாயும் உள்ள தீர்மானங்களை தலைவர் பிரேரிக்க அவை நிறைவேறின.

## தேசீயக் கோரிக்கை

பின்னர், தேசீயக் கோரிக்கை சம்பந்தமாக விஷயாலோசனைக் கமிட்டியில் நிறைவேறிய தீர்மானத்தை ஸ்ரீ ஜெயப்பிரகாச நாராயணர் பிரேரித்தார்.

(11-ம் பக்கம் பார்க்க)









# நோட்டீஸ்

சிவகெங்கை

டி. மு. கோர்ட்டு.

1934ஸ்ரீ O. S. No. 219

1938ஸ்ரீ E. P. No 506.

பொன்னய்யா பிள்ளை — வாதி

கருப்பய்யாத் தேவன் — பிரதிவாதி

ஷை பிரதிவாதி என்பவருக்கு.

ஷை நிர்பர் டிக்கிரிக் கடனுக்காக ... சொத்துக்களை ஏலத்துக்கு கொண்டுவர மனுக்கொடுத்து கிஸ்தியாரை நிர்ணயிப்பதற்காவும் வாதி ஏலத்தில் கேழ்க்க அனுமதி கோரி 38 E. A. 958ல் மனுக்கொடுத்து ஷை மனுவுக்கும் 4-4-39உ வாயிதா ஏற்பட்டிருக்கிறது. ஆட்சேபனையை ஷை வாயிதாவன்று பகல் 10 மணிக்கு ஷை கோர்ட்டு முன் ஆஜராகி தெரிவித்துக் கொள்ளலாம் தவறினால் ஒருதலைப் பட்சமாய் தீர்மானிக்கப்படு மென்பதை அறிவித்திருக்கிறது.

G. Nagaswami Iyer
Vakil.
சிவகெங்கை.
14—3—39.

# காரைக்குடி நகரசபை

## பள்ளிக்கூடத் திறப்புவிழா

(நமது நிருபர்)

நேற்று காலை 8-30 மணிக்கு காரைக்குடி நான்காவது வார்டில் முனிசிபல் பள்ளிக்கூட ஆரம்ப விழா நடந்தது. அக்கூட்டத்திற்கு ஸ்ரீ சி. மு. அரு. நாராயணன் செட்டியார் தலைமை வகித்தார். தலைவர் முன்னுரையாகப் பேசுகையில் இந்த பள்ளிக்கூடத்தையும் சேர்த்து இந்நகரில் 9 பள்ளிக்கூடங்கள் ஆரம்பிக்கப் பட்டிருப்பதாயும் இதைப்போன்று ஒவ்வொரு வார்டிலும் ஒவ்வொரு பள்ளிக்கூடம் ஏற்படுத்த முயற்சிக்குமாறும் கமிஷனரைக் கேட்டுக்கொண்டார்.

அடுத்தபடியாக கமிஷனர் ஸ்ரீ புருஷோத்தம் பேசுகையில், முனிசிபாலிட்டியாரின் கொள்கை ஒவ்வொரு வார்டிலும் பள்ளிக்கூடத்தை ஏற்படுத்துவதுதானென்றும், பள்ளிக்கூடம் ஒன்று திறப்பதென்றால் பலரின் அனுமதியைப் பெறவேண்டியதிருக்கிறதென்றும், ரொம்ப சிரமமிருக்கிறதென்றும் குறிப்பிட்டு இந்தப் பள்ளிக்கூடம் ஆண், பெண் இருபாலர்க்கும் பொதுவாக ஏற்படுத்தப்பட்டிருக்கிறதென்றும், கூடியசீக்கிரம் உருது தெரிந்த மகமதிய பெண் ஒருவர் நியமிக்கப்படுவாரென்றும், எல்லோரும் படித்துவிட்டால், சுகாதாரத்தைப்பற்றிப் போதிப்பிக்க, உத்தியோகஸ்தர்களும் மசோதாவும் தேவையில்லையென்றும், பிறகு ஸ்தலஸ்தாபன செலவு குறையுமாகையால், அதன் மூலம் வரிகளைக் குறைக்க முடியுமென்றும், இப்பள்ளிக்கூடத்தில் கூடிய சீக்கிரம், பெரியவர்களுக்காக வாசகசாலையொன்று ஆரம்பிக்கப்படுமென்றும் குறிப்பிட்டார்.

அடுத்தபடியாக பள்ளிக்கூடத் திறப்பாளர் விஸ்வபந்து ஆசிரியர் ஸ்ரீ தி. ம. நடராஜன் பாடசாலை, கல்வியின் அவசியம், பெண்கல்வி முதலியவைகளைப்பற்றி விரிவாகக் குறிப்பிட்டு "அறியாமை ஒழிப்பு இயக்கம்" ஒன்று ஆரம்பிக்கவேண்டுமென்றும், அதற்காக முயற்சி செய்யவேண்டுமென்றும் கேட்டுக்கொண்டார். ஸ்ரீ தண்ணீர்மலையான் செட்டியார் சிறிது பேசினர். ஸ்ரீ சொ. நாராயணன் வந்தனம் கூறக் கூட்டம் முடிந்தது.

# சுகாதாரச் சட்டத்தை விளக்க

## கமிஷனர் வேண்டுகோள்

புதிய, பொது சுகாதார சட்டம் இவ்வாரம் முதல் அமுலுக்கு வந்து வந்துவிட்டது. சட்டத்தின் விதிகளை பொது ஜனங்கள் தெரிந்து கொள்ளும்படி செய்யவேண்டியது அவசியம். எனவே, உள்ளூரிலுள்ள சங்கங்கள் தங்கள் ஆதரவில் பொதுக்கூட்டங்கள் கூட்டவும், பொது ஜனங்களுக்கு சட்டத்தின் அம்சங்களை எடுத்து விளக்கவும், அவர்களுடைய ஒத்துழைப்பைப் பெறவும் வேண்டிய நடவடிக்கைகளை யெடுத்துக்கொள்ள வேண்டுகிறேன். முனிஸிப்பல் ஹெல்த் ஆபீசரும், சானிட்டரி இன்ஸ்பெக்டர்களும் விஜயஞ்செய்து, சட்டத்தின் அம்சங்களை விளக்குவார்கள் என்று முனிஸிபல் கமிஷனர் உள்ளூர் சங்கங்களுக்கு ஒரு வேண்டுகோள் விடுத்திருக்கிறார்.

## மதுரையில் வேலை நிறுத்தம்

மதுரை மீனாட்சி மில்லில் 11உ காலை முதல் சுமார் 300 தொழிலாளர்கள் வேலை நிறுத்தம் ஆரம்பித்திருக்கின்றனர்.

# இளையாத்தக்குடி தேவஸ்தானம்

இவ்விடம் 9-3-39உ வியாழக்கிழமை நடந்த போர்டு-ஆப்-டிரஸ்டிகளின் 54-வது மீட்டிங்கில், "பிரமாதி-ஸ்ரீ வைகாசிமீ 14உ ஞாயிற்றுக்கிழமை சுக்லபக்ஷம் தசமி, நாழிகை 19 விநாடி 25, உத்திர நக்ஷத்திரம் நாழிகை 5, விநாடி 26, காலை 6 மணிக்கு மேல் 7 மணி அளவில் விருஷப லெக்னம், தாமஸவேளை கூடிய சுபதினத்தில் கும்பாபிஷேகம் செய்கிற தென்று தீர்மானிக்கப் பெற்றது.

இத்துடன் அதே தேதியில் ஷை லெக்னத்தில்பேரெ செந்தூருடையார் பிள்ளையாருக்கு கும்பாபிஷேகம் செய்கிற தென்றும், அதற்காக ஷை பிரிவு நகரத்தார் ரூ 250/—தேவஸ்தானத்திற்கு கொடுப்ப தென்றும், அதுபோலவே சிறுசேத்தூருடையார் பிள்ளையாருக்கும் ஷை தேதியில் கும்பாபிஷேகம் செய்கிறதென்றும், அதற்காக ஷை நகரத்தார்களிடம் ரூ. 50/—வாங்கிக் கொள்கிற தென்றும், அதுபோலவே கிங்கிணிக் கூருடையார் பிள்ளையாருக்கும், பெருமருதூருடையார் பிள்ளையாருக்கும் கும்பாபிஷேகம் செய்கிற தென்றும், அதற்காக ஷை நகரத்தார்களிடம் முறையே ரூ. 400-ம் ரூ. 400-ம் வாங்கிக் கொள்கிற தென்றும் தீர்மானிக்கப்பெற்றது.

T. S. கிருஷ்ணசாமி அய்யர்
மானேஜர்
12—3—39

குமரன்

காரைக்குடி
வெகுதானிய-ளு பங்குனி-மீ 3உ

## திரிபுரம் காங்கிரஸ்

அமைதியாக முடிவு பெற்றமை யாவருக்கும் மகிழ்ச்சியளிப்பதாகும். எங்கே ரூரத்தின் ஞாபகத்தைக் காட்டிவிடுமோ என்ற அச்சம் பலருக்கும் எழுந்துவிட்டது. காங்கிரஸின் பெருமையில் பெரும்பாகம் மகாத்மாவின் விஜயமாகுமென்று கூறவேண்டியதில்லை. இந்த ஆண்டு மகாத்மா வரமுடியாமற் போய்விட்டது. தலைவர் போஸ் உடல்நிலை ஊர்வலத்திற்கு மட்டுமல்லாமல் மகாநாட்டிற்கே வரமுடியாமற் செய்துவிட்டது. தேசத்தின் ஒரு பெருந்தலைவரும், காங்கிரஸ் ஆண்டுத்தலைவரும் இல்லாமல் காங்கிரஸ் முடிவுபெற்றது பிளவுக்கு அறிகுறி காட்டிக் குமுறியெழுந்த மேகம் விலகிபோடியதொன்றே வருத்தத்தை நீக்கிய தென்னலாம்.

பந்த் கொண்டுவந்த தீர்மானமே காங்கிரஸின் முக்கிய தீர்மானமாக இருந்திருக்கிறது. வந்திருந்த பிரதிநிதிகட்கு மகாத்மா இடத்தில் நம்பிக்கையிருக்கிறதென்று தீர்மானம் செய்யப்பட வேண்டியதில்லை. போஸுக்குப் போட்டியாக மகாத்மா பெயர் குறிப்பிடப்பட்டிருந்தால்—அல்லது மகாத்மா நேர் முகமாக ஒரு அறிக்கை வெளியிட்டிருந்தால், போஸுக்கு மூன்று ஓட்டும் கிடைக்குமோ என்பது சந்தேகமே. இரண்டு மில்லாத போது மகாத்மாமீது நம்பிக்கை இருக்கிறதென்று தீர்மானம் வரவேண்டியதில்லையென்பது எவருமறிந்த உண்மை. ஆனால் காரியக்கமிட்டியார்மீது நம்பிக்கை இருக்கிறதென்பதைத் தெரிவிக்கவே இத்தீர்மானம் வந்திருக்கிறது. ஆனால் இதில் மகாத்மாவைப் பற்றிச் சேர்மானம் இல்லாவிட்டால் தீர்மானம் நிறைவேறாதென்று கருதியே இப்படிச் சுழட்டி இருக்கின்றனர். மகாத்மாவை இந்த தேசத்துக்கு சர்வநிகாரியாக மக்கள் நினைத்திருக்கின்றனர்—மற்ற நாட்டு சர்வாதிகாரி பாதிரியா? அல்ல தெய்வமாக—உயிராக—நினைத்திருக்கிறார்கள். மகாத்மாவைக் கலந்து காரியக்கமிட்டி நியமிக்க வேண்டும் என்று இத்தீர்மானம் கொண்டுவரப்பட்டிருக்கலாம். அதற்குக் காரியக்கமிட்டியாரை ஏற்றவேறு வழி இல்லை. இதைத்தவிர போஸ்பேரில் நம்பிக்கையில்லை யென்ற தீர்மானம் நேரடியாகக் கொண்டுவர இயலவில்லை. என்றாலும் காரியக்கமிட்டி அமைக்கும் பொறுப்பை அவரிடமிருந்து எடுத்துவிட வேண்டுமென்ற பழித்தீர்ப்பு இத்தீர்மானத்தில் சேர்க்கப்பட்டிருக்கிறது. தீர்மானம் எப்படியானாலும், யார் தலைவரானாலும், யார் காரியக்கமிட்டியிலிருந்தாலும் இதுபோது மகாத்மாவுக்கு மாறுபட்டு ஒன்றும் செய்ய இயலாதென்பது உறுதி. மற்றவர் திட்டம் உருப்படியாகவும் முடியாது. ஆகவே படேல் கட்சியாரும் சரத் போஸ் சட்சியாரும் எவ்வளவு தூரம் மூறுகி நின்றாலும் மகாத்மாவின் வழியில் தான் நாடு நடைபெறுகிறது; நடைபெறும். ஆனால் படேல் கட்சிக்குப் பூரண ஆதரவு மகாத்மா என்பது தான் இப்போதிருக்கிற நிலைமை யென்பது கவனிக்கத்தக்கது. ஆதலால் தான் மகாத்மா இல்லாத போது இப்படிப்பட்ட திருகல் தீர்மானம் நிறைவேறியிருக்கிறது.

பிரதிநிதிகள் என்ன செய்வர்? போஸினிடம் இருந்த ஆர்வத்தால் ஓட்டுபோட்டுவிட்டனர். போட்ட ஓட்டு எல்லை சரியு முன்பே நம்பிக்கை இல்லையென்று எப்படிச் சொல்ல முடியும்? மகாத்மா இதில் எவ்வளவு தூரம் சம்பந்தப்பட்டாரென்பது தெரிந்தும் அவருக்கு விரோதம் செய்ய மனமிடந்தரவில்லை. தர்ம சங்கடத்திலகப்பட்டுக் கொண்டனர். என்றாலும் திரிபுரம் காங்கிரஸ் நிலைமையை சமாளித்து மேல் தொல்லைக்கு இடமின்றிப் பிழைத்து விட்டது.

சமஷ்டித் திட்டம்பற்றிய தீர்மானத்தில் விசேஷமாகப் புதுமையில்லை. சமஸ்தான விஷயங்களை காங்கிரஸ் தலையிட்டுச்செய்யப்படவேண்டிய நிலைமை முன்னமே ஏற்பட்டு விட்டதால் அத்தீர்மானமும் புதியதன்று. எனவே இந்த காங்கிரசில் அடுத்த வருஷத் திட்டத்தைத் திறம்பெற முடிவு செய்ய சந்தர்ப்பம் இல்லாமற் போய்விட்டதென்று தான் சொல்ல வேண்டும். காரியக் கமிட்டியார் ஒரு திசையிலும் தலைவர் ஒரு திசையிலும் இருக்கவேண்டியதாய் விட்டது. அதோடு மகாத்மா ராஜகோட்டில் இருக்க நேர்ந்துவிட்டது. இந்த நிலைமையில் என்னதான் எதிர்பார்க்க முடியும்? இந்த அளவு நடைபெற்றதே மகிழ்ச்சிக்குரியதென்பதில் சந்தேகமில்லை.

### பர்மா சென்ற இந்தியர்

பர்மா கலவரம் காரணமாக, பர்மாவிலிருந்து இந்தியா திரும்ப 11,000 பேர்களுக்கு உதவி செய்யப்பட்டதாக இந்தியா சட்டசபையில் கேட்கப்பட்ட ஒரு கேள்விக்குப் பதிலளிக்கப்பட்டது. 1935-36ல் 21,900 இந்தியரும், 1936-37ல் 19,000 பேரும், 1937-38ல் 18,900 பேர்களும் பர்மா சென்றனர்.

### மோசடி வழக்கில் தண்டனை

கோட்டையூர் ராமநாதன் செட்டியாரிடமிருந்து நகைகள் வாங்குவது போல் நடித்து 9300 ரூ. நகைகளையும் 5000 ரூ. ரொக்கமும் மோசடி செய்ததாக ஏற்பட்ட வழக்கில், ராமநாதபுரம் உதவி செஷன்ஸ் நீதிபதி எதிரிகளான ராமன் செட்டிக்கும் பெத்தபெருமாள் செட்டிக்கும் 10 வருடக் கடுங்காவல் தண்டனை விதித்தார்.

### பீஹாரில் சட்டமறுப்பு

பீஹாரில் சர்க்கார் வார்தா திட்டத்தை அமுலுக்குக் கொண்டுவந்தால் அதை எதிர்த்துச் சட்டமறுப்புச் செய்வதென்று, பீஹார் மாகாண முஸ்லீம் லீக் மகாநாட்டில் தீர்மானிக்கப்பட்டிருக்கிறது.

### தமாஷா வரிச்சட்டம்

தமாஷா வரிச்சட்ட மசோதா சென்னை கெஸட்டில் பிரசுரமாயிருக்கிறது. தமாஷாவுக்காகக் கொடுக்கப்படும் கட்டணங்களில் $12\frac{1}{2}$ சதவிகிதம் வரியாக வசூலிக்கப்படும்.

### உத்யோக விஷயம்

ரஜாவிலிருந்து திரும்பியதும் ஸ்ரீமான் எம். வி. பி. கோான் ராமநாதபுரம் ஜில்லா செஷன்ஸ் ஜட்ஜாக நியமிக்கப்பட்டிருக்கிறார். மிஸ்டர் பி. டப்ளியு லேன் ராமநாதபுரம் அபிஷியேட்டிங் போலீஸ் சூப்பிரண்டாக நியமிக்கப்பட்டிருக்கிறார். ராமநாதபுரம் ஜில்லா போலீஸ் சூப்பிரண்டு ராவ் பகதூர் கருணாகரன் நாயர் சென்னை உதவி இன்ஸ்பெக்டர் ஜெனரலாக நியமனம்.

### விதல்பாய் படேல் உயில் வழக்கு

இவ்வழக்கில் பம்பாய் ஹைகோர்ட் நீதிபதி வாடியா 14உ தீர்ப்பளிக்கும்போது, ஒதுக்கி வைக்கப்பட்ட தொகையை ஒரு தர்ம டிரஸ்டாக மதிக்க முடியாதென்றும், எனவே அதை விதல்பாயின் வார்சுகளுக்குக் கொடுத்துவிடவேண்டுமென்றும் குறிப்பிட்டார்.

## காரைக்குடி நகர சபை

### 1939-40 வருஷ பட்ஜெட்

6-3-39ல் நடந்த காரைக்குடி முனிசிபல் சபையால் ஒப்புக் கொள்ளப்பட்ட புதிய ஆண்டு பட்ஜட்டின் சுருக்கம் வருமாறு:—

எதிர்பார்க்கப்படும் வரவு ரூ 1,97,760
" செலவு ரூ 2,03,650

புதிய ஆண்டில் வரிகள் சம்பந்தப்பட்ட மட்டில் 85.7 சத விகிதமும், இதர வருமானம் 94.2 சத விகிதமும் வசூலாகுமென எதிர்பார்க்கப்படுகிறது. சுங்கக் கட்டணம், மோட்டார் வண்டிகள், முதலியவற்றின் லைசென்ஸ் கட்டணம் நஷ்டஈடாக கவர்ன்மெண்ட் ரூ 50,600 கொடுக்கலாம்.

சிப்பந்திகள் விஷயத்தில் சிக்கனம் செய்வதற்கில்லை. இவ்வகையில் புதிய ஆண்டின் உத்தேசச் செலவு ரூ 20,250 ஆகும். புதிய ரஸ்தாக்கள் பல போடவும், மணிக்கூண்டு ஒன்று அமைக்கவும் திட்டமிடப்பட்டிருக்கிறது. போக்குவரத்து சாதனங்களுக்காக ஒதுக்கப்பட்டிருக்கும் தொகை ரூ 36780.

சுகாதாரம் சம்பந்தப்பட்ட மட்டில் புதிதாக சானிட்டரி இன்ஸ்பெக்டர் ஒருவரும் 12 தோட்டிகளும் நியமிக்க பிரேரேபிக்கப் படுகிறது. விளக்குவரி வருமானம் ரூ 20,700; செலவு ரூ 25,200. நகர அபிவிருத்தியை முன்னிட்டு $\frac{1}{4}$ சத விகிதம் வரியை உயர்த்த யோசனை கூறப்படுகிறது. இப்பொழுதுள்ள வரி விகிதம் $1\frac{1}{4}$%

கட்டாய ஆரம்பக் கல்வித்திட்டம் நடத்துவதற்கு ஏதுவாகப் புதிய ஆண்டில் 1, 4, 9, 15 வார்டுகளில் ஒவ்வொரு பள்ளிக் கூடம் ஏற்படுத்த யோசனை கூறப்பட்டிருக்கிறது.

சிறு பிள்ளைகளை வளர்ப்பதற்கான நர்சரி-திட்டம் தயாரித்துகவர்ன்மெண்டாரின் அனுமதி கேட்கப்பட்டிருக்கிறது. இவ்வகைக்கு செலவு ரூ 10,910 ஆகும். புதிதாக 3 பார்க்குகள் இந்த வருடம் ஏற்படுத்தப் படலாம். நகர சபை புதிய கட்டிடத்தின் வேலை இவ்வாண்டில் துவக்கப்படும்.

### பிரஜைகளின் குறைகள்

சமஸ்தான மன்னர்கள் கடமை

மார்ச் 13-உ புது டில்லியில் மன்னர் சபைக் கூட்டத்தை ஆரம்பித்து வைக்கும்போது ராஜப்பிரதிநிதி அடியில் வருமாறு பேசினர்:—

சமஸ்தானதிபதிகள் எல்லோரும் தங்கள் சமஸ்தான விஷயங்களில் சிரத்தை காட்ட வேண்டும். தங்கள் பிரஜைகள் திருப்தியாக வாழும்படி செய்யவேண்டும். சமஸ்தானங்களின் சார்பாகவோ அன்றி தகாத உத்யோகஸ்தர்களின் சார்பாகவோ அனாவசியமான நிர்ப்பந்தங்கள், வரிகள் முதலியவற்றிற்குள்ளாகிக் கஷ்டப்படுமாறு பிரஜைகள் விடப்படாமலும் பார்த்துக்கொள்ள வேண்டும்.

### "அந்நியர் தலையீட்டை அனுமதிக்கமாட்டேன்"

"இந்த சமஸ்தானத்தைப் பொறுத்த மட்டில் வெளியார் தலையிட்டால் அதை சகித்திருக்கமாட்டோம்" என்று திருவாங்கூர் திவான் ஸர். ஸி. பி. ராமசாமி அய்யர் ஒரு கூட்டத்தில் பேசியிருக்கிறார்.

### திருவிதாங்கூரில் சட்டமறுப்பு

திருவிதாங்கூர் சமஸ்தானக் காங்கிரஸ் காரியக் கமிட்டி, மார்ச் 25உ சட்டமறுப்பை ஆரம்பிக்கத் தீர்மானித்திருக்கிறது.

## மகாத்மா—வைசிராய் சந்திப்பு

ராஜ்கோட், மார்ச் 13—

ராஜ்கோட் விவகாரங்களைப் பற்றி ராஜப்பிரதிநிதியுடன் கலந்து பேச, மகாத்மா காந்தி இன்று மாலை டில்லிக்குப் பிரயாணமானர். புறப்படுமுன், தாகூர்சாஹிப் தர்பார் வீரவாலாவுடன் ராஷ்டிரிய சாலைக்கு வந்து மகாத்மாவைச் சந்தித்துப் பேசினர். புதன் கிழமை காலை மகாத்மா வைஸிராயைச் சந்திக்கிறார். மார்ச் 20உ அவர் ராஜ்கோட்டுக்குத் திரும்பி விடுவாரென்று எதிர்பார்க்கப்படுகிறது.

### கம்பர் விழா

நிகழும் பங்குனி 5ம் நாள் சனிக்கிழமை கவிச்சக்கரவர்த்தி கம்பர் பிறந்த பதியாகிய தேரழுந்தூர் என வழங்கும் திரு அழுந்தூரில் கம்பர் விழாக் கொண்டாட்டம் திருவாளர் டி. கே. சிதம்பரநாத முதலியார் பி. ஏ. பி. எல்., தலைமையில் நடைபெறும். அவ்வமயம் கம்பர் வரலாறு, கம்ப சித்திரம் இவைபற்றிய சொற்பொழிவுகள் நடைபெறும்.

### கொழும்பில் வரவேற்பு

கண்டவராயன்பட்டி திருவாளர் வி. சி. பழ. பழனியப்ப செட்டியாரவர்கள் மார்ச் 7உ காலை 7 மணிக்கு இங்கே வந்து சேர்ந்தார்கள். இலங்கை செட்டியார் சங்கத் தலைவர் திரு. வி. கரு. சித. மெய்யப்பசெட்டியார், இளைஞர் சங்கம் திரு. கதிரேசனார், எம். ஆர். சேதுராமன், முதலிய சுமார் 50 கனவான்கள் வரவேற்று மாலையணிவித்து உபசரித்தார்கள்.

### நேமத்தான்பட்டி ரயில்வேஸ்டேஷன்

நேமத்தான்பட்டியில் ரயில்வே ஸ்டேஷன் ஏற்படுத்துவது பற்றி விவாதிக்கும் பொருட்டு தென்னிந்திய ரயில்வே கம்பெனியார் செட்டிநாடு ரயில்வே ஸ்டேஷனில் 30-3-39 காலை 9-30 மணிக்கு ஒரு மீட்டிங் ஏற்பாடு செய்திருக்கிறார்கள். அதில் கீழ்க் கண்டவர்கள் கலந்துகொள்வார்கள்:

1. காரியதரிசி, கிராமக் காங்கிரஸ் கமிட்டி, நேமத்தான்பட்டி
2. ஸ்ரீ P. S. குமாரசாமிராஜா தலைவர், ராமநாதபுரம் ஜில்லாபோர்டு
3. ஸ்ரீ T. N. காளிதாஸ் அய்யர் B. A., B. L., S. I. Ry., ஆலோசனைக்கமிட்டி மெம்பர்.
4. நேமத்தான்பட்டி கிராம காங்கிரஸ் கமிட்டிக் காரியதரிசிக்கு உதவிக்காக ஒருவர்
5. ராஜா சர் அண்ணாமலை செட்டியார், கானாடுகாத்தான்
6. தலைவர், பஞ்சாயத்து போர்டு கானாடுகாத்தான்

### விருதை சிவஞான யோகிகள் காலமானர்

விருதை சிவஞான யோகிகள் தமது 100-வது வயதில், 28-2-39ல் காலமானர்.

### ராஜிநாமா

(நமது நிருபர்)

தேவகோட்டை நகரக் காங்கிரஸ் கமிட்டித் தலைவர் ஸ்ரீ ஆர். சங்கரன் தமது தலைவர் பதவியையும், அங்கத்தினர் பதவியையும் ராஜினாமாச் செய்துவிட்டதாகத் தெரிகிறது.

### காரைக்குடி இந்திய இளைஞர் சங்கம்

இச்சங்கத்தின் மகாசபைக் கூட்டம் தலைவர் ஸ்ரீ சித. க. கதிரேசன் செட்டியார் தலைமையில் 13-3-39ல் கூடியது. காந்திஜீயின் உண்ணாவிரதம் வெற்றியடைந்ததைப் பாராட்டுவதாக ஓர் தீர்மானம் நிறைவேறியது.



## ஹிந்து மதாபிமான சங்கத்தாரின் வேண்டுகோள்

செட்டிமார் நாட்டிலேயே சமூக சீர்திருத்தம், தேசிய வேலை முதலியன நடைபெறுவதற்குக் காரணமாயிருந்தது காரைக்குடி ஹிந்து மதாபிமான சங்கமென்பது யாவருமறிந்ததே! நமது தேசியத் தலைவர்களில் பெரும்பாலோரும் தமிழ் அறிஞர்களும் நமது சங்கத்தை இதுவரையிலும் மறக்கவில்லையென்பது அவர்கள் இப்பகுதிக்கு விஜயஞ் செய்யும்பொழுது சங்கத்தைப்பற்றி விசாரிப்பதிலிருந்து அறிந்துகொள்ளலாம். செட்டிமார் நாட்டில் இளைஞர்களுக்குள் எழுச்சியை உண்டாக்கியது இச்சங்கமேயாகும். தேசிய கவி சுப்பிரமணிய பாரதியாரின் வாழ்த்துப் பாவைப் பெறும் பாக்கியம் இச்சங்கத்தாருக்குத்தான் கிடைத்தது. இச்சங்கமானது நிறுவப்பெற்று இப்போது 22 வருஷங்களாகின்றன. நீண்டகாலம் நல்ல வேலைகள் பல செய்துவந்தது. சில காலமாக வாசகசாலை மட்டும் நடைபெற்று வருகிறது. அங்கத்தினர்களிடமிருந்து எவ்வித சந்தாவும் வசூலிக்காமல் மூலதனத்திலிருந்தே செலவு செய்யப்பெற்றது. சென்ற ஐந்தாண்டுகளாக தலைவர் ஸ்ரீ நாவ. மெ. நா. நாகப்ப செட்டியாரும் காரியதரிசி ஸ்ரீ அரு. ராம. அருணாசலஞ் செட்டியாரும் ஊக்கங் குன்றாமல் பொறுப்பேற்று நடத்தி வந்தார்கள். இச்சங்கத்திற்கு மூலதனமாக பாங்கில் ரூபா 2675 இருக்கிறது. செட்டிமார் நாட்டின் பிரபல தலைவர்கள் பலர் ஜீவிய அங்கத்தினர்களாக விருக்கிறார்கள். உள்ளூரிலும் வெளியூர்களிலும் 126 அங்கத்தினர்கள் இருந்துவருகிறார்கள். இந்த நிலைமையில் சங்கத்தைத் திறம்பட நடத்தி பழைய ஆக்க வேலைகளைச் செய்ய வேண்டுமென்றும், மதுரை தமிழ் வித்துவான் ஸ்ரீ மு. ரா. கந்தசாமிக் கவிராயரவர்களிடமிருந்து வாங்கப்பெற்ற பல அரிய தமிழ் நூல்களைக் கொண்ட புத்தகசாலையைப் பலருக்கும் பயன்படச் செய்ய வேண்டுமென்றும் இச்சங்கத்தின் பேரபிமானிகளில் பலரின் விடாமுயற்சியால் சென்ற 12—3—39 மாலை 5-மணிக்கு சங்கத்தின் மகாசபைக் கூட்டம் கூட்டப்பெற்றது. புது வருடத்திற்கு ஸ்ரீ சொ. நாராயணன் செட்டியார் தலைவராகவும், ஸ்ரீ செ. அ. ராம. முருகப்ப செட்டியார் உப-தலைவராகவும், ஸ்ரீ அழ. அருணாசலன் காரியதரிசியாகவும், ஸ்ரீ மு. பழ. பழனியப்ப செட்டியார் உதவிக் காரியதரிசியாகவும், ஸ்ரீ அரு. ராம. அருணாசலம் செட்டியார் பொக்கிஷதாராகவும் தேர்ந்தெடுக்கப்பெற்றார்கள். நிர்வாக சபைக்கு ஸ்ரீ சொ. முருகப்பா, ஸ்ரீ ராய. சொக்கலிங்கன், ஸ்ரீ முத்து. நாராயணன், ஸ்ரீ மெ. சு. தி. தண்ணீர்மலையான், ஸ்ரீ ராம. அழகப்பா, ஸ்ரீ ராம. பழநியப்பன் முதலிய அறுவரும் தேர்ந்தெடுக்கப்பெற்றார்கள். சங்க புத்தகத்தில் பதிவாக இருக்கும் இப்போதுள்ள அங்கத்தினர்களிடமிருந்து வசூலாக வேண்டிய சந்தாப் பாக்கிகள் முழுமையும் தள்ளிவிட்டு நாளது பங்குனிமீ முதல் வருட சந்தா 6—0—0 வீதம் வசூலிப்பதென்றும் புதிதாகச் சேருபவர்களிடமிருந்து பிரவேசக் கட்டணம் ரூ 1—0—0ம் சந்தாவும் வாங்குவதென்றும் தீர்மானிக்கப்பெற்றது. சங்கத்தை நல்ல வசதியான இடத்திற்கு மாற்றவும் யோஜிக்கப்பட்டிருக்கிறது. எனவே இதுவரை அங்கத்தினர்களாயுள்ள நண்பர்கள் நாளது பங்குனிமீ முதல் தங்கள் சந்தாக்களைச் செலுத்தும்படியும் புதிதாக அங்கத்தினர்களாகச் சேரவிரும்புபவர்களும் சேர்ந்து சங்கத்தை ஆதரிக்கும்படியும் கேட்டுக்கொள்வதாகக் காரியதரிசி எழுதுகிறார்.

திரிபுரம் காங்கிரஸ்

## காங்கிரஸ் கமிட்டிகளின் நடவடிக்கைகள்

### அ. இ. கா. கமிட்டி

மார்ச்சு 7உ மாலை அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி திரிபுரத்தில் ஆரம்பமானது. ஸ்ரீ. சுபாஷ் போஸின் தேக அசௌக்கியத்தை முன்னிட்டு அவர் கூட்டத்திற்கு வராததால் மௌலானா அபுல்கலாம் அஸாத் தலைமைவகித்தார். காந்திஜி தமது உண்ணாவிரதத்தை நிறுத்தி விட்டாரென்ற செய்தியை பண்டித நேரு அறிவித்தபோது 'மகாத்மா காந்திக்கு ஜே!' என்ற கோஷம் வானைப்பிளந்தது. ராஜ்கோட் பிரச்னை பற்றி தாம் அறிந்த தகவல்களையும் பண்டிதர் வெளியிட்டார். பொதுக் காரியதரிசி ஆசார்ய கிருபாலினி தமது அறிக்கையையும் கணக்கு விவரங்களையும் சமர்ப்பித்தார். கணக்குகள் அங்கீகரிக்கப்பட்டதன் மேல், கூட்டம் மறுநாள் வரை ஒத்தி வைக்கப்பட்டது. 1938-39-ல் காங்கிரஸில் மொத்தம் 44,78,720 அங்கத்தினர்கள் சேர்ந்திருப்பதாகவும், இத்தொகை, 1936-37ம்வருஷத்திய எண்ணிக்கையைப்போல் ஏழு மடங்கானதென்றும் அறிக்கையில் குறிப்பிடப்பட்டிருந்தது. கமிட்டிக் கூட்டம் முடிந்ததும் சேத் கோவிந்ததாஸ் அங்கத்தினர்களுக்கு ஒரு தேநீர் விருந்து நடத்தினர்.

### பண்டித பந்த் தீர்மானம்

விசேஷ பரபரப்புக் கிடையே காங்கிரஸ் கமிட்டி 8உ மாலை கூடியது. ராஷ்டிரபதி போஸை ஒரு சாய்வு நாற்காலியில் தொண்டர்கள் எடுத்துக்கொண்டு வந்தனர். தலைவரின் விருப்பப்படி பழைய காரியக் கமிட்டி அங்கத்தினர்கள் மேடை மீதமர்ந்தனர். பின்னர் பொதுக் காரியதரிசியின் அறிக்கை அங்கீகரிக்கப்பட்டது. சுமார் 160 மெம்பர்கள் கையெழுத்திட்ட தீர்மான மொன்றை பண்டித கோவிந்த வல்லப பந்த் பிரேரித்தார். சென்ற வருஷக் காரியக் கமிட்டியிடம் பூரண நம்பிக்கையிருக்கிறதென்று கூறி மகாத்மா காந்தியின் விருப்பப்படியே சுபாஷ் பாபு புதிய காரியக் கமிட்டியை அமைக்க வேண்டுமென்று தீர்மானம் வற்புறுத்தியது. இத்தீர்மானத்தைக் கமிட்டியில் விவாதிக்க அதிகார முண்டா என்பதுபற்றி நீண்ட நேர விவாதம் நடந்த பிறகு, அதிகாரமில்லையென்று தலைவர் தீர்ப்பளித்தார்.

### விஷயாலோசனைக் கமிட்டி

சிற்றுண்டிக்குப் பிறகு, காங்கிரஸ் கமிட்டி விஷயாலோசனைக் கமிட்டியாக மாறியது. பண்டித பந்தின் தீர்மானத்தைப்பற்றிப் பலத்த விவாதம் நடைபெற்றது. தலைவர் கூட்டத்தை மறுநாள் மாலை வரை ஒத்திவைத்தார். 9உ மாலை 3-30 மணிக்கு மீண்டும் விஷயாலோசனைக் கமிட்டி கூடியது. ஸ்ரீ சுபாஷ் தலைமை வகித்தார். ஸ்ரீ பந்தின் தீர்மானத்தின் மீது மீண்டும் விவாதம் நடைபெற்றது. காரியக் கமிட்டி அங்கத்தினர் மீது தான் பழி யெதுவும் கூறவில்லை யென்றும் அவ்வாறு எண்ணுவது பிசகென்றும் சுபாஷ் பாபு கூறினர். பல திருத்தப் பிரேரணைகள் கொண்டுவரப்பட்டன. இத்தோடு கூட்டம் முடிந்தது. 10உ பிற்பகல் கூடிய விஷயாலோசனைக் கமிட்டிக் கூட்டத்திற்கு ஸ்ரீ போஸ் வரவில்லை. மௌலானா ஆஸாத் தலைமை வகித்தார். பண்டித பந்தின் தீர்மானத்துக்குக் கொண்டு வரப்பட்ட திருத்தங்கள் அனைத்தும் தோற்றன. முடிவில் அசல் தீர்மானம் நிறைவேறியது.

11உ காலை விஷயாலோசனைக் கமிட்டி கூடியபோது, தேசிய கோரிக்கை, அந்நிய நாட்டுக் கொள்கை, சமஸ்தானங்கள் நிலை, காங்கிரஸ் ஊழல்கள் சம்பந்தமான தீர்மானங்கள் பற்றி ஆலோசனை நடைபெற்றது. 12உ மாலையிலும் இவ்விஷயம் தொடர்ந்து நடைபெற்றது. எல்லாத் தீர்மானங்களும் நிறைவேறின. அன்று மாலை 5-மணியோடு விஷயாலோசனைக் கமிட்டிக் கூட்டம் முடிவடைந்தது. வழக்கம் போல் காங்கிரஸ் முடிந்ததும் அகில இந்திய காங்கிரஸ் கமிட்டிக் கூட்டம் நடைபெறுமென மௌலானா அபுல் கலாம் அஸாத் அறிவித்தார்.

### காரியக் கமிட்டி மெம்பர்கள்

காங்கிரஸ் மகாசபையில் ஸ்ரீ பண்டித வல்லப பந்தின் தீர்மானம் நிறைவேறிவிட்டாலும், காங்கிரஸ் தலைவரின் நிலைமையில் எவ்வித மாறுதலும் உண்டுபண்ணிவிடவில்லை யென்றும், காந்திஜியை நேரில் சந்தித்தோ அல்லது அவருடன் கடிதப் போக்கு வரத்து நடத்தியோ அவர் புதிய காரியக் கமிட்டியை நியமிப்பாரென்றும் ஒரு செய்தி கூறுகிறது.

### அபேதவாதிகள் ராஜினமா

பண்டித பந்தின் பிரேரணை காங்கிரஸ் மகாசபைக் கூட்டத்தில் விவாதத்துக்கு வந்தபோது, அபேத வாதிகள் நடுநிலைமை வகிக்க வேண்டுமென ஸ்ரீ ஜெயப்பிரகாச நாராயணர் சொன்னதன் பயனாக, பஞ்சாப், ஐக்கிய மாகாணம் ஆகிய மாகாணங்களிலிருந்து காங்கிரஸுக்குச்சென்றிருந்த அபேதவாதக் கட்சி அங்கத்தினர்களிற் சிலர் அக்கட்சியிலிருந்து ராஜினமாச் செய்துவிட்டார்களாம்.

### டிக்கட் விற்பனை

காங்கிரஸ் மகாசபைக் கூட்டம், விஷயாலோசனைக் கமிட்டிக் கூட்டம் சம்பந்தமாக உபசரணைக் கமிட்டியினர் மொத்தம் 75000 ரூபாய்க்கு டிக்கட்டுகள் விற்றிருப்பதாகத் தெரிகிறது. வரவேற்புக் கமிட்டி மெம்பர்கள் கட்டணம் மூலம் லட்சம் ரூபாய் கிடைத்திருக்கிறதாம்.

### காங்கிரஸ் ஆஸ்பத்திரி

விஷ்ணுதத்த நகரிலுள்ள காங்கிரஸ் ஆஸ்பத்திரி மார்ச் 13உ மூடப்பட்டது. அதில் மொத்தம் 5000 பேர் சிகிச்சை பெற்றுக்கொண்டனர்.

### காங்கிரஸ் தந்தி ஆபீஸ்

மார்ச் 3உ திரிபுரத்தில் தந்தி ஆபீஸ் ஏற்படுத்தப்பட்டது. காங்கிரஸ் வாரத்தில் மொத்தம் 8000 பத்திரிகைத் தந்திச் செய்திகள் அனுப்பப்பட்டிருக்கின்றன. (மொத்தம் 10 லட்சம் வார்த்தைகள்) 1200 தந்திகள் வெளியிடங்களிலிருந்து வந்தன. மொத்தம் 1500 தடவை டிரங்கு டெலிபோனில் சம்பாஷணை நடைபெற்றது.

### 'ஓட்டைப் படகு'

திரிபுரியில் காங்கிரஸ் கண்காக்ஷிப் பந்தலில் சென்னைப் பிரதம மந்திரி ஸ்ரீ ஸி. ராஜகோபாலாச்சாரியார் 9-ம் தேதியன்று பெரிய கூட்டமொன்றில் பேசினர். அப்போது 'காந்திஜியின் படகு விசாலமான பழைய படகு. புதுப் படகு ஓட்டைப் படகு. அதில் ஏறினல் எல்லோரும் மூழ்கி விடுவோம். அல்லது ஓட்டைப் படகை நம்மோடு கட்டி இழுத்துக் கொண்டு போனாலும் ஆபத்துதான்' என்று குறிப்பிட்டார்.

### குற்ற பரம்பரையினர் மகாநாடு

அகில இந்திய குற்ற பரம்பரையினர் மகாநாடு திரிபுரத்தில் மார்ச் 10உ கூடியது. குற்ற பரம்பரையினர் சட்டத்தை ரத்து செய்ய வேண்டுமென்றும், அதற்கான ஏற்பாடுகளை உடனேயே செய்ய வேண்டுமென்றும், வங்காளத்தில் விவசாயிகள், தொழிலாளர்கள், விடுதலையான ராஜீயக் கைதிகள் முதலியோர் விஷயத்திலும் இச்சட்டத்தை அமுல் நடத்துவது கண்டிக்கத் தக்கதென்றும், இதற்கான ஏற்பாடுகள் செய்ய 21 பேர் அடங்கிய ஒரு கமிட்டியை நியமிப்பதாயும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

### அரசியல் தியாகிகள் மகாநாடு

மார்ச் 10உ திரிபுரம் ஜண்டா சதுக்கத்தில் ஸ்ரீ மோகன்லால் சாக்ஸேனா தலைமையில் அரசியல் தியாகிகள் மகாநாடு கூடியது. கிருஷிகர்—தொழிலாளர் இயக்கம் சம்பந்தமாகக் கைது செய்யப்பட்டவர்களையும் அரசியல் கைதிகளாக நடத்த வேண்டுமென்று தீர்மானிக்கப்பட்டது.

### சுபாஷ் பாபு தேக நிலை

தான்பாத் மார்ச் 14உ

காங்கிரஸ் தலைவர் சுபாஷ் பாபு இன்று காலை பம்பாய் மெயிலில் இங்கு வந்திறங்கினர். அவருக்கு நேற்று 102.8 டிக்ரி சுரமிருந்தது. இன்னும் 15 தினங்கட்கு அவர் கல்கத்தாவுக்குப் போக முடியாதென வைத்தியர்கள் சொல்லுகிறார்கள்.

## தந்திச் செய்தி

### ரெங்கூன் மார்க்கெட்

மார்ச் 15-உ

| | |
|---|---|
| பெரிய மில் ரெயில் நஸெய்ன் | 85/86 |
| பெரிய மில் படகு " | 88/89 |
| மீடோன் | 92/93 |
| சிறிய மில் ரெயில் நஸெய்ன் | 86/87 |
| சிறிய மில் படகு " | 88/89 |
| மீடோன் | 92/93 |
| கனங்டோ அரிசி | 210 |
| நஸேன் லொவ்ன்ஸெயின் | 192 |
| மீடோன் " | 199 |
| மாசி-மீ நடப்பு வட்டி | 0-5-0 |

### சென்னை மார்க்கெட்

சென்னை, மார்ச். 14

| | | | |
|---|---|---|---|
| சவரன் விலை (மொத்த விலை) | 23 | 11 | 3 |
| சவரன் (சில்லரையில்) | 23 | 11 | 9 |
| தங்கம் ரெடி | 36 | 13 | 6 |
| ஷை வாயிதா | 36 | 15 | 3 |
| மூசை | 36 | 6 | 6 |
| வெள்ளி வாய்தா | 51 | 10 | 0 |
| வெள்ளி ரெடி | 53 | 12 | 0 |
| வெள்ளி (சில்லரையில்) ரூபாய் எடை | 0 | 8 | 9 |

### கொழும்பு மார்க்கெட்.

கொழும்பு மார்ச் 13உ

| | | |
|---|---|---|
| கிரேப் ரப்பர் | $46\frac{1}{2}$ | சதம் |
| ஷை ஷீட் | $42\frac{1}{2}$ | " |
| ஷை கூப்பன் | 34 | " |
| ட கூப்பன் | $45\frac{1}{2}$ | " |

### கொப்பரா

முதல் தரம் ரூ. 29·00

### லண்டன் ரப்பர்

லண்டன் மார்ச் 13உ

ரப்பர் ராத்தல் ஒன்றுக்கு எட்டே கால் பென்ஸ்

### சிங்கப்பூர் ரப்பர்

சிங்கப்பூர், மார்ச். 13உ

ரப்பர் பீக்கல் ஒன்றுக்கு 38வெள்ளி 17 காசு.

### லண்டன் ரப்பர் ஸ்டாக்

லண்டன் மார்ச் 13

| | | |
|---|---|---|
| லண்டன் ஸ்டாக் | 47,442 | டன் |
| முந்தின வாரம் | 47,988 | " |
| 11உயோடு முடிவான வாரம் டெலிவரி | 1,343 | " |
| முந்தின வாரம் | 1,047 | " |
| லிவர்ப்பூல் ஸ்டாக் | 26,668 | " |
| ஷை முந்தின வாரம் | 26,489 | " |
| டெலிவரி | 1009 | " |
| முந்தின வாரம் | 791 | " |

### தி. நா. பாங்கு விஷயம்

ஹைக்கோர்ட் தீர்ப்பு

திருவாங்கூர் நாஷனல் & கொல்லம் பாங்கியைத் திருத்தியமைப்பது சம்பந்தமாக சென்னை ஹைக்கோர்ட்டின் பரிசீலனையி லிருந்த மனுவின் மீது தீர்ப்பளிக்கப்பட்டுவிட்டது. புனரமைப்பு யோசனைக்கு கொச்சி, திருவாங்கூர் லிக்விடேட்டர்கள் ஒத்துவராததால் புனரமைப்புத் திட்டத்தை அனுமதிப்பதற்கில்லை யென்றுகனம் ஜட்ஜ் தமது தீர்ப்பில் குறிப்பிட்டிருக்கிறார்.

### போப்பாண்டவர் மகுடாபிஷேகம்

மார்ச் 12உ பகல் 12-6க்கு வடிகன் நகரிலுள்ள ஸென்ற் பீடர்ஸ் சர்ச்சில் போப்பாண்டவருக்கு மகுடாபிஷேகம் நடைபெற்றது. சுமார் ஐந்து லட்சம் ஜனங்கள் கூடியிருந்தனர். மகுடாபிஷேகச் சடங்குகளின் விவரம் ரேடியோ மூலம் ஏழு பாஷைகளில் உலக முழுதுக்கும் பிரகடனம் செய்யப்பட்டது.

### மார்க்கநாதர் அவதூறு வழக்கு

(நமது நிருபர்)

திருப்பத்தூர்மெய்வழிச்சபைத்தலைவர் மார்க்கநாதர் ஷையூர் தனலெட்சுமி பிரஸின்மீது தேவகோட்டை சப்கலெக்டர் கோர்ட்டில் தொடர்ந்திருந்த வழக்கு இராமநாதபுரம் செஷன்ஸ்கோர்ட்டில் தனலெட்சுமி பிரஸ்காரர்களால் அப்பீல் செய்யப்பட்டிருந்ததில் 5.3-39 ல் தீர்ப்புச் சொல்லப்பட்டது. துண்டுப்பிரசுரங்கள் வாதிக்கு நஷ்டத்தையும் கஷ்டத்தையும் விளைவித்தன என்பதற்காகஎதிரிகள்வருந்துகிறார்கள் என்று சேர்த்துக்கொள்ளும்படி கேட்டுக்கொண்டதன் பேரில் முதலாவது எதிரி ரூபா 25 ம் இரண்டாவது எதிரி ரூபா 10 ம் அபராதம் செலுத்தும்படிக்கும் செலுத்தத் தவறினல் ஒரு மாதம் வெறுங்காவல் என்றும் தீர்ப்புக் கூறப்பட்டது.

### புதிய ஜட்ஜ்

சமஷ்டி கோர்ட் நீதிபதியாக நியமிக்கப்பட்ட ஸர் கனம் எஸ். வரதாச்சாரியின் ஸ்தானத்தில் ஸ்ரீமான் முண்டகளத்தூர் பதஞ்சலி சாஸ்திரி சென்னை ஹைக்கோர்ட்டு நீதிபதியாக நியமிக்கப்பட்டிருக்கிறார்.



(6-ம் பக்கத் தொடர்ச்சி)

"இந்நாட்டுக்குச் சுயேச்சை தேடவும், அந்நிய அதிகாரிகள் தலையீடின்றி இந்நாட்டு மக்களால் தெரிந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகள் நிர்ணயிக்கும் ஒரு அரசியலையே ஏற்றுக்கொள்ளவும் முடிவு செய்திருப்பதை மீண்டும் காங்கிரஸ் வற்புறுத்துகிறது. வேறு எவ்வித அரசியலையும் இந்திய மகாஜனங்கள் ஏற்றுக்கொள்ள மாட்டார்கள். சமஷ்டியை ஏற்கமுடியாது. இதனால் இப்போதுள்ள அரசியல் திட்டம் ரத்துசெய்யப்பட்டு தேச மகாஜனங்களால் தயாரிக்கப்பட்ட சுதந்தர அரசியலைப் புகுத்தவேண்டும். காங்கிரஸின் லட்சியம் துரிதமாகக் கைகூடும்படி செய்ய வேலை செய்து வரும்படி எல்லா காங்கிரஸ் கவர்ன்மெண்டுகளையும், ஸ்தாபனங்களையும் பொதுஜனங்களையும் கேட்டுக் கொள்கிறது" என்பது தீர்மானத்தின் சுருக்கம். ஆச்சாரிய நரேந்திர தேவர் ஆதரித்தார். ஸ்ரீ சரத் சந்திரபோஸ் எதிர்த்துப் பேசும்போது, சுய நிர்ணய சுதந்திர உரிமையை இந்தியாவுக்குக் கொடுக்கும் உத்தேசம் உண்டா இல்லையா என்று பிரிட்டிஷ் கவர்ன்மெண்டைத் திட்டமாகக் கேட்கவேண்டிய காலம் வந்துவிட்டதென்றும், நமது கோரிக்கைக்குப் பதில் சொல்ல ஒரு காலக் கெடுவைக் குறிப்பிட வேண்டுமென்றும், 6 மாதக்கெடு போதுமானதென்றும் குறிப்பிட்டார். பண்டித நேரு தீர்மானத்தை ஆதரித்துப் பேசினர். பெரும்பாலான ஓட்டுகளால் தீர்மானம் நிறைவேறியது.

### காங்கிரஸ் ஊழல்

பின்னர், காங்கிரஸ் ஊழல்கள் சம்பந்தமாகவுள்ள தீர்மானத்தை ஸ்ரீ ஸ்ரீபிரகாசர் பிரேரித்தார். அங்கத்தினர்கள் சேர்க்கும் முறையிலும், தேர்தல்களிலும் இதர வழிகளிலும் ஏற்படும் ஊழல்கள் காரணமாகக் காங்கிரஸ் யந்திரம் வேலை செய்வது கஷ்டமாக இருப்பதால் காங்கிரஸ் அமைப்பில் மாறுதல் செய்வதுள்பட அவசியமான எல்லா நடவடிக்கைகளையும் எடுத்துக் கொள்ளவும் அந்த மாறுதல்களை உடனே அமுலுக்குக் கொண்டுவரவும் அகில இந்திய காங்கிரஸ் கமிட்டிக்கு அதிகாரம் கொடுக்கிறது என்பது தீர்மானம். பண்டித நேக்கிராம் ஆதரிக்க இது ஏகமனதாக நிறைவேறியது. இத்துடன் இரண்டாம் நாள் கூட்டம் முடிந்தது.

### காந்திஜி ஆக்ஞை

அன்றிரவு காங்கிரஸ் கலைந்த பிறகு பண்டித நேரு மகாத்மா காந்தியுடன் டெலிபோனில் பல முக்கியமான விஷயங்களையும் பற்றிக் கலந்துகொண்டதாகத் தெரிகிறது. காங்கிரஸிலிருந்து எல்லாப் போலிகளையும் அப்புறப்படுத்த வேண்டியது அவசியமென காந்திஜி வற்புறுத்தியதாயும் காங்கிரஸ் ஊழலை அகற்றுவது பற்றியுள்ள தீர்மானம்பற்றி திருப்தியடைந்தாரென்றும் தெரிகிறது. சுபாஷ் பாபுவின் தேக நிலை குறித்து அவர் அதிகக் கவலைப்பட்டதாயும் சுபாஷ் பாபு ராஜிநாமாச் செய்தால் அது மிக்க வருந்தத் தக்கதாக இருக்குமென்றும்; தப்பு அபிப்பிராயங்கள் நீங்கினபடியால், சுபாஷ் பாபுவுடன் விசுவாசமாக இருப்பதாக எல்லா தலைவர்களும் அவருக்கு உறுதி கூறவேண்டுமென்றும் காந்திஜீ கூறியதாகத் தெரிகிறது.

### மூன்றும் நாள்

மார்ச் 12௳ காலை 9 மணிக்கு விஷயாலோசனைக் கமிட்டிப் பந்தலில் மௌலானா அபுல்கலாம் அஸாத் தலைமையில் கூடிற்று. குழப்பம் எதுவும் ஏற்படா

### நிறைவேறிய தீர்மானங்கள்

## திரிபுரத்தில் தேசீய காங்கிரஸ்

திருக்க விசேஷ ஏற்பாடுகள் செய்யப்பட்டிருந்தன. பண்டித பந்த் தமது தீர்மானத்தைப் பிரேரித்தார். தலைவரின் தேகநிலை கேவலமாக இருப்பதால், அவர் குணமடைந்து கூட்டத்துக்கு வரச் சௌகரியப்பட்டபின் இப்பிரேரணையை விவாதத்துக்கு எடுத்துக்கொள்ளலாம் என்று ஸ்ரீ நரிமன் ஒரு திருத்தம் கொண்டுவந்து தலைவர் சம்பந்தப்பட்ட இத்தீர்மானத்தை அவரில்லாத போது விவாதிப்பது சரியல்லவென்று குறிப்பிட்டார். பிரேரணை தோற்றது. வேறு பல திருத்தங்களும் கொண்டுவரப்பட்டன. கடைசியில் அவை தோற்கடிக்கப்பட்டு, பண்டித பந்தின் அசல் பிரேரணை 'காந்திக்கு ஜே' என்ற கோஷத்துடன் நிறைவேறியது. அபேதவாதிகள் நடுநிலைமை வகித்தனர். விவாதத்திற்குப் பதிலளிக்கும்போது தமது தீர்மானம் தலைவரிடம் நம்பிக்கையில்லை என்று தெரிவிப்பதாகாதென்றும் காங்கிரசுக்குள் ஒற்றுமையை விளைவிக்கவே இத்தீர்மானம் கொண்டு வந்திருப்பதாயும் பண்டித பந்த் கூறினர். இத்துடன் மாலை 6 மணி வரை ஒத்திவைக்கப்பட்டது.

### பாலஸ்தீனம்—பலுசிஸ்தான்

மாலை 6-30 மணிக்கு மீண்டும் மௌலானா அஸாத் தலைமையில் காங்கிரஸ் மகாசபை கூடியபோது பாலஸ்தீனம்—பலுசிஸ்தான் நிலைமை சம்பந்தமான தீர்மானங்களை தலைவர் பிரேரித்தார். பாலஸ்தீனத்தில் அராபியர்கள் நடத்திவரும் விடுதலைப் போராட்டத்துக்கு அனுதாபந் தெரிவிப்பதாயும் பிரிட்டிஷ் சர்க்காரின் கொள்கையைக் கண்டிப்பதாயுமுள்ளது முதல் தீர்மானம். பலுசிஸ்தானத்தில், இந்திய மாகாணங்களிலிருப்பதுபோன்ற அரசியல் அந்தஸ்தை ஏற்படுத்துமாறு கேட்டுக் கொள்வது இரண்டாவது தீர்மானம். இரண்டும் ஏகமனதாக நிறைவேறின.

### அந்நிய நாட்டுக்கொள்கை

மியூனிச் ஒப்பந்தத்தில் முடிந்த பிரிட்டிஷ் அந்நிய நாட்டுக்கொள்கையை காங்கிரஸ் ஆட்சேபிப்பதாயும் ஜன நாயகத்துக்கு விரோதமான காரியங்களைச் செய்யும் கவர்ன்மெண்டுகளை பிரிட்டன் ஆதரிப்பதைக் கண்டிப்பதாயும், ஏகாதிபத்யக் கொள்கையையும் பாஸிஸ்டுக் கொள்கையையும் காங்கிரஸ் ஒருங்கே எதிர்ப்பதால் இந்தியாவுக்கு தனித் தனியாக ஒரு அந்நிய நாட்டுக் கொள்கையை நிர்ணயித்துக் கொண்டு சமாதானத்துக்கும் சுதந்திரத்துக்கும் அனுமதி தேடவேண்டுமெனக் காங்கிரஸ் அபிப்பிராயப்படுகிறது என்ற தீர்மானத்தைப் பண்டித நேரு பிரேரித்தார். தீர்மானம் ஏகமனதாக நிறைவேறியது.

### சமஸ்தான விஷயம்

சமஸ்தானப் பிரச்னைபற்றிய தீர்மானத்தை ஸ்ரீ ராஜேந்திர பிரசாத் பிரேரித்தார். தீர்மானத்தின் சுருக்கம் வருமாறு:-

சமஸ்தானப் பிரஜைகளிடையே ஏற்பட்டுள்ள விழிப்பை காங்கிரஸ் வரவேற்கிறது. சமஸ்தானப் பிரஜைகள் பொறுப்பாட்சி கோருவதை ஆதரிக்கிறது. சமஸ்தானங்களில் கையாளப்படும் அடக்கு முறைகளைக் கண்டிக்கிறது. சமஸ்தானப் பிரஜைகள் தங்களுக்குள் கட்டுப்பாட்டையும் பலத்தையும் வளர்க்க வேண்டுமென்றே ஹரிபுரா தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. ஆனல், சமஸ்தானப் பிரஜைகளுக்குத் தலைமை வகித்து நடத்தத் தனக்குள்ள உரிமையைக் காங்கிரஸ் அதன் மூலம் விட்டுக்கொடுக்கவில்லை. காங்கிரஸ் சமஸ்தான மக்களுடன் நேரடியாக அதிகமாக ஒத்துழைக்கும்படியான சமயம் நேரிடலாம். அவ்வப்போது ஏற்படும் நிலைமைகளுக்கு ஏற்றவாறு உத்தரவு பிறப்பிக்க காரியக் கமிட்டிக்கு அதிகார மளிக்கிறது.

திருத்தங்கள் கொண்டுவரப்பட்டன. அவை தோற்று முடிவில் அசல் தீர்மானம் நிறைவேறியது.

### வெளிநாட்டு இந்தியர்

பிறகு வெளிநாட்டு இந்தியர் பற்றிய தீர்மானத்தை ஸ்ரீ சத்தியமூர்த்தி பிரேரித்தார். பர்மாவிலுள்ள இந்தியரின் உயிருக்கும் உடமைக்கும் ஆபத்து ஏற்பட்டிருப்பதிலும் இலங்கை இந்தியருக்கு விரோதமாகக் கிளர்ச்சிநடந்து வருவதிலும் தென்னாபிரிக்காவில் இந்தியருக்கு விரோதமாகச் சட்டங்களை இயற்றி வைப்பதிலும் காங்கிரஸ் முக்கியமாகக் கவலை கொள்கிறது. கடல் கடந்த இந்தியரின் துயரத்தைத் துடைக்க முடிந்த அளவு செய்யும்படி நாட்டு மக்களைக் கேட்டுக்கொள்கிறது என்பது தீர்மானத்தின் சுருக்கம்.

தீர்மானம் நிறைவேறியது.

### அடுத்த காங்கிரஸ்

டிஸம்பர் மாதம் கடைசி வாரத்தில் அடுத்த காங்கிரஸ் கூட்டம் கூட வேண்டுமென்று பண்டித ஜவஹர்லால் பிரேரித்தார். பாபு ராஜேந்திர பிரஸாத் காங்கிரஸை பீஹாருக்கு அழைத்தார். இத்தீர்மானம் ஏகமனதாக நிறைவேறியது. (ராஜன் பாபுவின் அழைப்பு ஏற்றுக்கொள்ளப்பட்டது)

### வந்தனோபசாரம்

தேக அசௌக்கியத்தையும் பாராட்டாமல், கடமை யொன்றையே நோக்கமாகக்கொண்டு திரிபுரத்துக்கு வந்த ராஷ்டிரபதி சுபாஷ் போசுக்கும், அவரில்லாதபோது தலைமை வகித்த மௌலானா அபுல்கலாம் ஆஸாதுக்கும், வரவேற்புக் கமிட்டியாருக்கும் தொண்டர்களுக்கும் ஸ்ரீமதி சரோஜினி தேவியும் வரவேற்புக் கமிட்டித் தலைவர் சேத் கோவிந்த தாஸும் நன்றி செலுத்தினர்.

### முடிவு

தலைவர் தமது முடிவுரையில் எல்லோருக்கும் நன்றி செலுத்தி, ராஷ்டிரபதி சுபாஷ் சீக்கிரம்குணமடையும்படி பிரார்த்திப்பதாகத் தெரிவித்தார். பிறகு வந்தே மாதர கீதம் பாடப்பெற்று, மகாத்மா காந்திக்கு ஜே என்ற கோஷத்துடன் இரவு 10-30 மணிக்கு 52-வது காங்கிரஸ் மகாசபைக் கூட்டம் முடிவடைந்தது.

### கொடி வணக்கம்

மார்ச் 13௳ காலை ஜண்டா சவுக்கில் தொண்டர்கள் அணிவகுத்துக் கொடி வணக்கம் செய்தனர். பண்டித ஜவஹர் தொண்டர்களுக்குப் புத்திமதி கூறினர்.

### தலைவர்கள் புறப்பாடு

பல தலைவர்களும் பிரதிநிதிகளும் 12௳ இரவே புறப்பட்டுவிட்டனர். ராஷ்டிரபதி போஸ், சர்தார் படேல், புலாபாய் தேசாய் முதலியோர் 13௳ புறப்பட்டனர். 13௳ அகில இந்திய காங்கிரஸ் கமிட்டிக் காரியாலயம் திரிபுரத்தில் மூடப்பட்டது. 15௳ அலகாபாத்தில் திறக்கப்படும்.

திரிபுரி காங்கிரஸ் — பொருட்காட்சி திறப்பு

# ஏழைகளின் வறுமையைப் போக்க வழி

## குடிசைத் தொழிலைப் பெருக்குவதே

### பண்டித நேரு பிரசங்கம்

மார்ச் 6வ- திரிபுரத்தில், அகில இந்திய கிராமக் கைத்தொழிற் பொருட்காட்சியைத் திறந்து வைக்கும்போது பண்டித ஜவஹர்லால் நேரு தமது

ஸ்ரீ ஜவஹர்லால் நேரு.

உரையில் அடியில் வருமாறு குறிப்பிட்டார்:—

கிராம மக்களின் கதி மோக்ஷத்தைப்பற்றி நீங்கள் சிந்திக்காதவரையில் உங்களுக்குச் சுதந்திர நினைவு] ஏற்படாது. நான் ஒரு அபேத வாதி. மூலப் பொருள்கள் இருக்கும் வரையில் இந்நாட்டில் பெரிய பெரிய தொழில்கள் செழிக்கவேண்டு மென்பதே எனது விருப்பம். ஆனால் பெரிய தொழில்களை ஆரம்பிப்பதால் நம் நாட்டு மக்களின் பசிப்பிணியைப் போக்க முடியாது.

பெரிய தொழில்களுக்கும் சிறிய தொழில்களுக்கும் பிணக் கேற்படாமல் நாம் பார்த்துக்கொள்ளவேண்டும். முதலாளிகள் கொழுப்பதற்காகப் பெரிய தொழில்களை ஏற்படுத்தக் கூடாது. இதனுல் ஒரு சிலர் நன்மையடைவார்களே யொழிய நூற்றுக் கணக்கானவர்களுக்குத் தீமையே உண்டாகும்.

இந்நாட்டில் கதர் தத்துவத்தைப் புகுத்தியவர் மகாத்மா காந்தி. சென்ற சில வருஷங்களாக அது தேச மக்களின் உடையாக அமைந்திருக்கிறது. சமீப காலத்தில் கதர்த் தொழில் விசேஷ அபிவிருத்தி அடைந்திருக்கிறது. மெல்லிய இழையில் அழகான சரக்குகள் பல இருக்கின்றன. விதம் விதமான தினுசுகளு மிருக்கின்றன.

பொருட் காட்சியைக் கண்ணுறுபவர்கள், வார்தாக் கல்வித் திட்டத்தின் பயன்களை அறிந்து வியப்படைவர். காங்கிரஸுடன் சம்பந்தப்படாதவர்கள்கூட அந்தத் திட்டத்தின் மகிமையை உணர்ந்து அங்கீகரிக்கிறார்கள். காங்கிரஸ் அதிகாரம் வகிக்கும் மாகாணங்களில் வயது வந்தவர்களுக்கும் படிப்புச் சொல்லிக்கொடுக்கப்பட்டு வருகிறது. ஹிந்துஸ்தானி தாலிமி சங்கம் நமது கல்வி முறையின் போக்கையே வெகு தூரத்துக்கு மாற்றியிருக்கிறது. இந்தியாவின் கல்விப் பிரச்னையை இது தீர்த்து வைக்குமென நம்புகிறேன்.

மணப் பெண்களுக்கென்று பிரிட்டோரியாவில் ஒரு பள்ளிக்கூடமும், டோக்கியோவில் இன்னொரு பள்ளிக்கூடமும் திறக்கப் போகிறார்கள். பிரிட்டோரியா (தென் ஆப்ரிக்கா) பள்ளிக்கூடத்தில் குடும்ப சாஸ்திரம், சுகாதாரம் உடற் பயிற்சி இவை கற்பிக்கப்படும்.







## சாதி எதிர்ப்புப் பிரசாரம்

### பஞ்சாபில் பிரசார சபைகள்

அகில இந்திய ஜட்-பட் தோரக் (ஜாதி யொழிப்பு) ஸென்ஸஸ் சங்க அமைப்புக் காரியதரிசி ஸ்ரீ ஹரி பக்வான் சமீபத்தில் மேலப் பஞ்சாபிலும், எல்லைப்புறத்திலும் சுற்றுப் பிரயாணம் செய்தார். அவர் பல முக்கிய இடங்களிலும் சொற்பொழிவுகள் நிகழ்த்தியது மன்றி பல பிரமுகர்களையும் நேரில் கண்டு பேசினர். ஆங்காங்கே, சாதி எதிர்ப்புப் பிரசாரம் நடத்த ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. சமூக ஊழியத் தலைவர்கள் பலர் ஆதரவளிக்க முன் வந்துள்ளனர். அங்கத்தினர்கள் சேர்க்கும் வேலை ஆரம்பமாய்விட்டது. 1941 வரை அங்கத்தினர் சந்தா ரூபா ஒன்ருக நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது. ஒவ்வொரு அங்கத்தினரும், வரப்போகும் ஜன கணிதத்தில், தமது சாதி யின்னதென்று தெரிவிக்கமாட்டாரென்றும், மற்றவர்களையும் அவ்வாறு செய்யும்படி தூண்டுவதாயும் உறுதி மொழி அளிக்கவேண்டும். ஜன கணிதம் முடிந்ததும் அகில இந்திய ஜட்பட் தோரக் டிரக்டரி வெளியிடப்படும். அதில் அங்கத்தினர்கள் பெயர்கள் வெளியாகும். இந்தியா முழுவதும் இவ்வருஷம் பிரசாரம் நடத்தப்படும். 1940 ஆரம்பத்தில், சங்கத்தின் பிரசுரங்கள் பல லட்சக் கணக்கில் ஒவ்வொரு முக்கிய ஸ்தாபனத்தினின்றும் விநியோகிக்கப்படும்.

### ராதாசுவாமி சத்சங்கமும் சேர்கிறது

ஆக்ரா, தயாள்பாக், ராதா சுவாமி சத்சங்க சபைக் காரியதரிசி லாகூர் சாதி யொழிப்புப் பிரசார சபைக்கு அனுப்பியுள்ள செய்தியில், ராதா சுவாமி சத்சங்கிகள் சாதி முறையை அகற்றிவிட்டதாயும் ஜன சங்கியைக் கணக்கில் அவர்கள் 'ஹிந்து'—ராதா சுவாமி என்று மட்டும் குறிப்பிடுவார்களே யன்றி, சாதி, மதப் பாகுபாடுகள் எதையும் குறிப்பிடமாட்டார்களென்றும் தெரிவித்திருக்கிருர்.

அகில இந்திய மாதர் மகாநாட்டிலும், சாதி யொழிப்புப் பிரசாரத்தை ஆதரிப்பதாக ஒரு தீர்மானம் நிறைவேறி யிருக்கிறது.

லாகூர் காலேஜிலுள்ள மாணவர் அனுமதி விண்ணப்பங்களிலும், ரெஜிஸ்டர்களிலும், 'சாதி' என்ற கலத்தை எடுத்து விடவோ அல்லது அதற்குப் பதில் 'சாதி யுண்டானல் அது' என்று திருத்தவோ வேண்டுமென்று, லாகூரில் நடைபெற்ற சாதி யொழிப்பு மகாநாட்டில் ஒரு தீர்மானம் நிறைவேறியிருக்கிறது. மற்ற மாகாணங்களிலுள்ள யூனிவர்ஸிட்டிகளுக்கும் காலேஜ்களுக்கும் இத் தீர்மானம் அனுப்பப்படும்.

### பவர் விளக்குக்கு விதை எண்ணெய்

மகாராஷ்டிர வாலிபர் ஆராய்ச்சி

உள்நாட்டு விதை எண்ணெய்களை உபயோகிக்கத் தக்க பவர் விளக்குகளை ஒரு இந்திய வாலிபர் செய்துள்ளார். இந்த விளக்குகளில் மண்ணெண்ணெயைப் போன்று, வேப்பெண்ணெய், வேர்க்கடலை எண்ணெய் தேங்காயெண்ணெய் முதலியவற்றை உபயோகிக்கலாம். பூனு பெர்கூஸன் காலேஜ் பட்டதாரியான ஸ்ரீ டி ஆர் ஜோக்லேகார்தான் இந்தப் புதிய ஆராய்ச்சியின் கர்த்தா. பதினறு வருஷமாக அவர் விடாமுயற்சியுடன் ஆராய்ச்சி செய்து இப்பொழுது வெற்றிபெற்றிருக்கிறார். அதுமட்டுமல்ல, இந்தியா தனக்கு வேண்டிய எண்ணெய்க்கும் பெட்ரோலுக்கும் வேறுநாடுகளை எதிர்பார்த்திருக்க வேண்டியதில்லை யென்றும் அவர் உறுதி கூறுகிறார். மேஜை விளக்கு, ஹரிக்கேன் விளக்கு, சிம்னியில்லாத விளக்கு எல்லாம் செய்யமுடியும் என்று அவர் தெரிவித்துள்ளார். மகாத்மாவும், மாளவியாஜியும் இவரைப் பாராட்டியிருக்கிறார்கள். இந்த விளக்குகளை தயாரிக்க ஒரு தொழிற்சாலை அமைப்பதற்கு உதவி செய்யும்படி அவர் பம்பாய் கவர்ன்மெண்டைக் கேட்டிருக்கிறார். கூடிய சீக்கிரம் இவை மார்க்கெட்டில் விற்பனைக்கு வரும்.

## விஜிலன்ஸ் அஸோஸியேஷன்

### பொது ஜனங்களுக்கு அறிவிப்பு

23-2-39ல் நடைபெற்ற காரைக்குடி விஜிலன்ஸ் அஸோஷியேஷன் கமிட்டியின் அவசரக் கூட்டத்தில் அடியிற்கண்ட தீர்மானங்கள் நிறைவேறினதாக ஷை கமிட்டித் தலைவர் அறிவிக்கிறார்:—

காரைக்குடி முனிசிபல் விஜிலன்ஸ் கமிட்டி என்றபேரால் ஆரம்பிக்கப்பட்டிருக்கும் உப கமிட்டியின் 11-2-39 நடவடிக்கைகளை இச்சங்கம் கவனித்து ஷை கமிட்டி நடவடிக்கைகளின் இரண்டாவது தீர்மானமானது காரைக்குடியில் ஆரம்ப முதல் மிக திறமையாக வேலைசெய்து சிறந்து விளங்கும் காரைக்குடி விஜிலன்ஸ் அசோஸியேஷனை அகௌரவப்படுத்தும் குறுகிய நோக்கத்துடன் செய்யப்பட்டிருப்பதாக இவ்வசோஸியேஷன் அபிப்பிராயப்படுகிறது.

முனிசிபல் சபையால் நியமிக்கப்பட்ட விஜிலன்ஸ் சபையைத்தவிர விஜிலன்ஸ் அசோஸியேஷன் என்ற பெயரால் விஜிலன்ஸ் வேலை செய்ய எவரையும் அனுமதிக்கலாகாதென்று போலீஸ் அதிகாரிகளைக் கேட்டுக்கொள்வதாக ஷை முனிசிபல் உப கமிட்டி செய்திருக்கிற தீர்மானமானது வரம்பு மீறிய பொறுப்பற்ற தீர்மானமாகுமென்றும் அது இச்சங்கத்தின்மீது அனுவசியமாக தப்பு அபிப்பிராயத்தை உண்டாக்குவதாகுமென்றும் ஆதலால் முனிசிபல் உபகமிட்டியின் ஷை தீர்மானத்தை உடனே ரத்து செய்ய முயலும்படி இவ்வசோஸியேஷனின் அங்கத்தினர்களாக உள்ள முனிசிபல் மெம்பர்களை இவ்வசோஸியேஷன் கேட்டுக்கொள்கிறது.

முதன்முதலாக காரைக்குடியில் விஜிலன்ஸ் வேலைகளை செய்ய ஆரம்பிக்கப்பட்டதும் சென்னை விஜிலன்ஸ் சங்கத்தால் அங்கீகரிக்கப்பட்டதும் 1936-37 வது வருஷத்திய காரைக்குடி முனிசிபல் நிர்வாக அறிக்கையில் பெரிதும் பாராட்டி எழுதப்பட்டிருப்பதுமான சங்கம் இதுவே என்பதை பொது ஜனங்களுக்கு தெரிவிப்பதோடு இச்சங்கத்திற்கு விரோதமாக செய்யப்படும் எந்த பிரசாரத்தையும் நம்பவேண்டாமென்று பொது ஜனங்களை இச்சங்கம் கேட்டுக்கொள்கிறது.

## நோட்டீஸ்.

### சிவகெங்கை டி. மு. கோர்ட்டு

1938-ஞ S. C. No. 653

வலையப்பட்டி ராம. சுப. சுப்பிரமணியன் செட்டியார் } வாதி

பூலாங்குரிச்சி அடைக்கக் கோனர் மகன் சின்னையா } பிரதிவாதி

வலையப்பட்டி சி கரு.ந. சோமசுந்திரம் செட்டியாருக்குப் பிரதிவாதி 28-10-35உயில் ரூ. 30-க்கு எழுதிக் கொடுத்திருந்த நோட்டையும் ஷையார் வசூலுக்காக வாதிக்கும் பிராங்கிண்டர்சு செய்து கொடுத்த மேல் வாதியால் பிரதிவாதிபேரில் ரூ. 34-11-4 க்கு வியாஜியம் செய்து 31-3-39உ. வாய்தா ஏற்பட்டிருக்கிறது. ஆக்ஷேபணை இருந்தால் வாய்தாவன்று ஆஜராகி தெரிவித்துக் கொள்ளவேணும்.

16-3-39. ஆர். நடராஜன், வக்கீல்.





மூன்றடி நீளமுள்ள எலி, மரமேறும் கங்காரு—இவற்றை டச்சு நியு கினி தீவுகளில் ஒருவர் கண்டுபிடித்திருக்கிறாராம்.

உலகிலேயே மிக விலை உயர்ந்த கடிகாரம் கோட்பாண்டவரிடமிருக்கிறது. அதன் மதிப்பு பதினயிரம் பவுன்.

உபயோகமற்ற ஆண்டுகளையும் வைக்கோலையும் ரசாயன முறையில் பக்குவப்படுத்தி அவற்றினின்றும் நூலையும், பட்டையும் உற்பத்தி செய்யும் முறையை ஒரு புடாபஸ்டு விஞ்ஞானி கண்டுபிடித்திருக்கிறார்.

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

மட்டுமின்றி சமஸ்தானங்களிலும் விழிப்பை உண்டுபண்ணியிருக்கிறது. முக்கியமாக சர்வதேச நிலைமை நமக்கு சாதகமாக இருக்கையில் ஸ்வராஜ்ய மடைய முடிவான நடவடிக்கையை எடுத்துக்கொள்ள நமது தேச சரித்திரத்தில் இதைத் தவிர வேறு எந்த சந்தர்ப்பத்தை நாம் காணமுடியும்? இப்பொழுதுள்ள நிலைமையில் நாம் எதிர்காலத்தில் அதிக நம்பிக்கை வைக்க வேண்டும். நாம் மட்டும் நமது வித்தியாசங்களை ஒழித்து நமது முழு பலத்தையும் உபயோகித்தால் இந்த நிலைமையில் விசேஷ காரியங்களை சாதித்துக் கொள்ளலாம். நமது தேச வாழ்க்கையில் இத்தகையதான அரிய சந்தர்ப்பத்தை நாம் விட்டுவிடுவதா?

### சமஸ்தானங்கள் விஷயம்

சமஸ்தானங்கள் சம்பந்தமாக நாம் கொள்ளவேண்டிய மனோபாவம் ஹரிபுரா தீர்மானத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. அந்த மனோபாவத்தை மாற்றிக்கொள்ள வேண்டுமென்று நான் திட்டமாக அபிப்பிராயப்படுகிறேன். ஹரிபுராத் தீர்மானத்தின்படி காங்கிரஸின் பெயரால் சட்டசபை வேலைகளையோ அல்லது சமஸ்தானப் போராட்டத்தையோ நடத்த முடியாது. ஆனால் ஹரிபுரா காங்கிரசுக்குப் பிறகு பல சம்பவங்கள் நிகழ்ந்து விட்டன. பெரும்பான்மையான விடங்களில் சமஸ்தான அதிகாரிகளுடன் பிரிட்டிஷ் சர்க்கார் கூட்டாகச் சேர்ந்து கொண்டிருப்பதை நாம் தற்போது பார்க்கிறோம். இம்மாதிரியான சந்தர்ப்பத்தில் காங்கிரஸைச் சேர்ந்த நாம் சமஸ்தான பிரஜைகளுடன் நெருங்கிய சம்பந்தங் கொள்ளவேண்டாமா?

### நமது கடமை

நமது தற்காலக் கடமை யாதென்பது எனக்குத் தெளிவாகத் தெரிகிறது. மேற்கண்ட தடையை நீக்குவதுடன் சமஸ்தானங்களில் பிரஜா சுதந்திரத்திற்கும் பொறுப்பாட்சிக்குமாக நடக்கும் பொதுஜன இயக்கங்களுக்கு வழிகாட்டும் வேலையைக் காரியக் கமிட்டி நடத்தவேண்டும். இதனைக் கட்டுபாடானதாகவும் விரிவானதாகவுமுள்ள முறையில் நடத்தவேண்டும். காரியக்கமிட்டி இப்பொறுப்பை ஏற்று நடத்தவேண்டிய காலம் வந்து விட்டது. இதற்காக விசேஷ உபக் கமிட்டியை ஏற்படுத்தலாம். மகாத்மா காந்தியின் வழிகாட்டுதலையும் ஒத்துழைப்பையும் நாம் பூரணமாகப் பயன்படுத்திக் கொள்ள வேண்டும். அகில இந்திய சமஸ்தானப் பிரஜைகள் மகாநாட்டின் ஒத்துழைப்பையும் பெறவேண்டும்.

## சுபாஷ் பாபு தலைமைப் பிரசங்கம்

### சித்தமாகுங்கள்!

சுயராஜ்யம் பெற நாம் இப்போதே தகுதியாக சித்தம் செய்துகொள்ள வேண்டும். நம்மிடையே தோன்றியுள்ள ஊழல்களை முதலில் போக்க வேண்டும். இந்நாட்டில் ஏகாதிபத்ய கொள்கையை எதிர்க்கும் சங்கங்களை நாம் ஆதரிக்க வேண்டும். முக்கியமாக கிருஷிகர் இயக்கம், தொழிற்சங்க இயக்கம் முதலியவற்றோடு சேரவேண்டும்.

### நம்பிக்கை யுண்டு

காங்கிரஸில் இப்போது கட்சிப் பிளவு ஏற்பட்டிருப்பதாகக் கருதலாம். நம்மில் சிலர் மனமுடைந்திருக்கிறார்கள். ஆனால் எனக்கு மட்டும் எப்போதும் நல்ல நம்பிக்கையுண்டு. இப்போது சூழ்ந்துள்ள மேகங்கள் மறையும் மேகங்கள். நம் நாட்டினரின் தேசாபிமானத்தில் எனக்கு நம்பிக்கையிருக்கிறது. சீக்கிரத்தில் இந்த கஷ்டத்தினின்றும் மீட்சி பெறுவோம். நம்மிடையிலும் ஒற்றுமை ஏற்பட்டு விடும். இதைப் போன்ற நிலைமையே கயா காங்கிரஸில் ஏற்பட்டது. அதற்குப் பிறகு தான் தேசபந்துவும், பண்டித மோதிலாலும் சுயராஜ்யக் கட்சியை ஏற்படுத்தினார்கள். காலஞ்சென்ற எனது குருவும் பண்டித மோதிலாலும் மற்ற அரும் தலைவர்களும் இந்த சமயத்தில் நமக்கு சூட்சும தேகத்துடன் உதவி புரியவேண்டும். நமது காரியங்கள் இனிது முடிய உதவவேண்டும். காந்திஜி நம்முடன் இருக்கிறார். அவர் இந்தக் கஷ்டத்திலிருந்து நம்மைக் காக்க முன்வர வேண்டும். இதுவே எனது பிரார்த்தனை. வந்தேமாதரம்.

---

## இந்தியாவின் ஸ்டாலின் மகாத்மா

(3-ம் பக்கத் தொடர்ச்சி)

பழைய ஆசாரியனிடமே விட்டுவிட வேண்டுமென்று எதிர்பார்ப்பது இயற்கையே.

### நம்பிக்கையும் கட்டுப்பாடும்

தகுந்த தருணம் வந்தவுடனே, மகாத்மா காந்தியே நமது போராட்டத்துக்கு புது வழி காட்டுவாரென்பதைப்பற்றி எனக்கு சந்தேகமில்லை. இன்று என்ன நடக்கவேண்டுமென்று காங்கிரஸ் அக்ராசனர் விரும்புகிறாரோ, அது நாளைக்கு நேரப்போவது நிச்சயம். உடனே போராட்டம் வேண்டுமென்று விரும்புவர்களின் உற்சாகத்தை நான் பாராட்டுகிறேன். ஆனால், அரசியலில் உத்சாகம் மட்டும் இருந்தால் போதாது. நம்முடைய தலைவரிடம் நம்பிக்கைவேண்டும்; கட்டுப்பாடு வேண்டும். இவைதான் முக்கியம். மகாத்மா காந்தியின் தலைமையின்கீழ், சென்ற இருபது வருஷங்களாக நம் நாடு அடைந்திருக்கும் பலத்திற்கு நமது அரசியல் சரித்திரத்திலேயே உதாரணம் இல்லை.

தேர்ச்சி யடைந்த ஒரு தளகர்த்தனைப் போல், அவர் பல முறை நம்மைப் போர்க்களத்துக்குப் போகும்படி உத்தரவிட்டிருக்கிறார். சில சமயங்களில் 'நில்லுங்கள்' என்றும் உத்தரவிட்டிருக்கிறார். அவருடைய தலைமையின்கீழ் இதுவரையில் நமக்கு தடுமாற்றம் ஏற்பட்டதில்லை. இதுவரையில் நாம் பின்பற்றி வந்த பாதையிலிருந்து இப்போது நாம் ஏன் மாற வேண்டுமென்று எனக்குத் தெரியவில்லை.

### பொன்மொழிகள்

தீரமும், வீரமும் இல்லாத ராஜதந்திரம் வெறும் கோழைத்தனம்; ராஜதந்திரம் இல்லாத வீரம் முரட்டுத்தனத்தைச் சேர்ந்தது என்று காளிதாஸ மகா கவி எழுதியிருக்கிறார். இந்த இரண்டு குணங்களுமே காந்திஜியிடம் இருக்கின்றனவென்று நான் கருதுகிறேன்.

காந்திஜியின் குரல், மிருதுவான, ஆனால், இரும்புத் தன்மை வாய்ந்த குரல் என்று சமீபத்தில் ஸ்ரீ ஜவாஹர்லால் நேரு சொன்னார். ஸ்ரீராம பிரானைப்பற்றி "வஜ்ரத்தைக் காட்டிலும் உறுதி வாய்ந்தவன்; ஆனால் புஷ்பத்தைவிட மிருதுவானவன்" என்று பவபூதி சொன்னார். காந்திஜிக்கு இந்த வர்ணனை நன்றாகப் பொருந்தும். நம்முடைய சுதந்தரத்தின் விரோதிகள் புஷ்பத்திற்குள் மறைந்திருக்கும் அந்த வஜ்ரத்தை உணர்ந்திருக்கிறார்கள். ஆனால், நம்மில் சிலர் இந்த புஷ்பத்தைப் பார்த்து அது பலஹீனத்தின் அடையாளமோ என்று ஏமாந்து விடுகிறோம்.



## விளம்பரம்.

காரைக்குடி முனிஸிபாலிடியைச் சேர்ந்த செக்காலையில் சிவகெங்கை சமஸ்தானத்திற்குச் சொந்தமான நிலங்கள் பிளாட்டுகளாகப் பிரிக்கப்பட்டு விற்பனைக்குத் தயாராக இருக்கின்றன. அவைகளில் 25 பிளாட்டுகள் மட்டும் தற்கால விலைக்கு இப்போது விற்கப்படும். பாக்கியுள்ள பிளாட்டுகளை பின்னடி உயர்ந்த விலைக்கு விற்கப்படும்.

(2) ஷை நிலங்கள் தேவையானவர்கள் சிவகெங்கை சமஸ்தானம் திவான் அவர்களுக்காவது அல்லது கண்டதேவியிலிருக்கும் சமஸ்தானம் தாசில்தார் அவர்களுக்காவது மனுச்செய்து கொள்ளலாம். மற்றும் ஷை நிலங்கள் விஷயமாய் ஏதேனும் தகவல் வேண்டுவோர் செக்காலையிலுள்ள சமஸ்தானம் பேஷ்கார் ஆபீஸில் நேரிலாவது, சமஸ்தானம் தாலுகாபீஸிலாவது கேட்டுத் தெரிந்து கொள்ளலாம்.

கண்டதேவி, 1—2—39.

G. S. துரைசாமித்தேவர்,
சமஸ்தானம் தாசில்தார்.





## சங்கங்களின் பயன்

### பேரறிஞர் விபுலாநந்த சுவாமிகளின் கருத்து

கொழும்பிலே தமிழ்த்தொண்டு சமூகத்தொண்டு முதலியன புரியும் "தனவைசிய இளைஞர் சங்கத்தைப்"பற்றி பேரறிஞர் சுவாமி விபுலாநந்தா அவர்கள் அறிஞர் கருத்துரைப் புத்தகத்தில் பின்வருமாறு எழுதுகிறார்கள்:—

"தனவணிக மரபிலே தோன்றி அருங்கலை விநோதர்களெனவும், கல்விச்சாலை ஸ்தாபகர்களெனவும், பத்திரிகை பதிபர்களெனவும், சொல்வன்மையாளர்களெனவும் புகழ்படைத்த நல்லோரது நட்புத்தொடர்பு, சங்கங்களின் வாயிலாக எனக்குவந்து எய்துவதாயிற்று. வடமொழி தென்மொழிப் புலமை வாய்ந்த "பண்டிதமணி" யெனும் தனவணிக மணியினை, மதுரைத் தமிழ்ச் சங்கம் கூட்டிவைத்தது. யாழ்ப்பாணத்து வாலிபர் மகாநாட்டிற்குத் தலைமை தாங்கிய காரணத்தினாலே, உலகு போற்றும் மகாத்மா காந்தியடிகளை வரவேற்கும் பாக்கியம் கிடைத்தது. அண்ணாமலை பல்கலைக் கழகமானது தனது ஸ்தாபகராகிய அரசரிடத்து உரிமையுண்டாக்கி வைத்ததோடு அவரது திருக்குமாரரையும் அறிமுகப்படுத்தியது. மேலைச்சிவபுரிச் சன்மார்க்க சபையானது தனக்கு அங்கமாயினோர் பலரை அறிமுகப்படுத்தியதோடு, கொப்பனாபட்டி வாசரும், "கலைமகள் கல்லூரி" ஸ்தாபகருமாகிய உண்மையன்பரை உரிமையாக்கிவைத்தது. காரைக்குடி இளைஞர் சங்கம் "குமர"னாசிரியரது நீங்காத நட்பினை நீண்ட காலத்திற்குமுன் கூட்டிவைத்தது. இரண்டாண்டுகளுக்கு முன்பு "தனவைசிய இளைஞர் சங்க"த்தின் ஆண்டு விழாவிலே தலைமைவகித்த நாண் முதலாக, இக்கொழும்புமா நகரிலே தமிழ்த்தொண்டும் சமூகத் தொண்டுஞ் செய்துவரும் தனவைசிய நண்பர்களது தொடர்பு ஏற்படுவதாயிற்று. சங்கங்களினாலே எய்தற்பாலதாகிய பெரும் பயன் இந்நட்புத் தொடர்பேயாமென எனக்குப் புலப்படுகிறது. ஒத்த மனத்தினோர் ஒன்று கூடு மிடமே கூடலெனவும் சங்கமெனவும் அறிஞராற் போற்றப்படுவது. 'எத்தால் வாழலாம், ஒத்தால் வாழலாம்' என்னும் முதுமொழியின் உண்மையைக் கடைப்பிடித் தொழுகுவோமெனின் நமது சங்கங்கள் சிறிதேனும் தளர்வடையா."

---

மார்ச்சு 1உ ஹாலந்து பார்லிமெண்டில் இரண்டு அங்கத்தினர்கள் வாய்ச் சண்டை முற்றிக்கை கலந்துகொண்டனர்.



## ஸோவியத் யூனியனில் நோயாளிகள் இன்ஷூரன்ஸ்

ஸோவியத் யூனியனில் அமுலிலிருக்கும் சமூக இன்ஷூரன்ஸ் திட்டம் மற்ற நாடுகளின் திட்டங்களினின்றும் வெகுவாக மாறுபடுகிறது. அந்நாட்டில் இத்திட்டம் முழுமையும் அரசாங்க ஊழியமாகக் கருதப்பட்டு நடைபெற்று வருகிறது. கைத்தொழில், வியாபாரம், கல்வி முதலிய ஸ்தாபனங்களும் இயக்கங்களும் அவ்விதமே. இந்தத் திட்டத்தால் மக்களுக்கு ஏற்படும் நன்மைகளும் அவ்வாறே மாறுபடுகின்றன. இந்த நிதியில் நேர் பகுதியிலிருந்து மூன்றிலிரு பங்கு வரை இன்ஷூரன்ஸ் உதவிகளுக்கு உபயோகிக்கப்படுகின்றது.

நோய், மரணம், இவை ஏற்படுங் காலத்து ரொக்கப் பணமும், இலவச வைத்திய சிகிச்சையும் எல்லோருக்கும், வயது அல்லது சம்பளத்தைக் கவனிக்காமலே அளிக்கப்படுகின்றன. நோய் ஏற்பட்ட தினத்திலிருந்து பூரண சௌக்கியம் ஏற்படும் வரை முழுச் சம்பளமும் தொழிலாளிகட்கு அளிக்கப்படுகின்றது. ஆனால் நோய் மதுபானத்தால் ஏற்பட்டதாக இருக்கக்கூடாது. ஏதாவது ஒரு தொழிலில் இரண்டுவருஷமும் மொத்தம் மூன்று வருஷத்துக்கு அதிகமாகவும் உழைத்திருக்கவேண்டும். 18 வயதுக்குக் குறைந்த அத்தனை பேர்களுக்கும் (16 வயதுக்குக் குறைந்தவர்கள் வேலைக்கு எடுத்துக் கொள்ளப்படுவதில்லை) இந்த உதவியுண்டு. இதர தொழிலாளர்கட்கு, அவர்களின் ஊழிய காலத்தின் அளவைப் பொறுத்து உதவி கிடைக்கும்.

இன்ஷூர் செய்துள்ள எல்லா பெண்களுக்கும் பிரசவத்துக்கு முந்தியும் பிந்தியும் 8 வாரங்கள் வீதம் நோய் ஏற்பட்டுள்ள காலத்தில் அளிக்கப்படும் உதவி விகிதப்படி உதவி செய்யப்படும். சிசுக்களுக்கு உடைக்கு 45 ரூபிளும், பரிபாலனத்துக்கு 90 ரூபிளும் (பெற்றோரின் சம்பளம் மாதம் 300 ரூபிளுக்குக் குறைவாக இருந்தால் மட்டும்) உதவியளிக்கப்படும். ஒன்றுக்கு மேற்பட்ட குழந்தைகள் ஒரே பிரசவத்தில் பிறந்தால், எண்ணிக்கைக்கு ஏற்றவாறு இந்தத் தொகை அதிகரிக்கப்படும்.

நோய்ப்பட்ட காலத்து இலவச சிகிச்சையும், பாதுகாப்பும், பல் சிகிச்சையும் அளிக்கப்படும். இலவசமாக மருந்துகொடுக்கும் முறை 1933 ல் ரத்து செய்யப்பட்டது. ஆனால், பொது மருந்துச்சாலைகளில் கிடைக்கும் மருந்துகளின் விலை மிகவும் சொற்பமானதுதான். இன்ஷூர் செய்துள்ள நபர் வசிக்கும் அல்லது வேலை செய்யும் பிரதேசத்தில் இலவசமாக வைத்தியப் பரிசோதனை நடத்திக் கொள்ளலாம்; வேறு பிரதேசத்தில் என்றால், தனிக் கட்டணம் செலுத்த வேண்டும்.

சுகவாச ஸ்தலங்கள், ஆரோக்கிய விடுதிகள் முதலியவற்றில், குறிப்பிட்ட தொகையினர்க்கு விசேஷ, தலை சிகிச்சை அளிக்கப்படுகின்றது. தொழிலாளர் ஐக்கிய சங்க ஸ்தாபனங்கள் தொழிலாளர்கட்கு இவற்றில் சிகிச்சைபெற ஸர்டிபிகட்டுகள் கொடுக்கின்றன. கட்சித் தலைவர்கட்கும் உயர்தர உத்யோகஸ்தர்கட்கும் சலுகை காண்பிக்கப்படுகிறது. ஆரோக்கிய விடுதிகளின் பரிபாலனத்துக்கு, தொழிலாளர் ஐக்ய சங்கங்களே பண உதவி செய்கின்றன. 1933ல் இந்த சங்கங்களின் ஆதிக்கத்தில் 94 விடுதிகள் இருந்தன. 1937ல் இத்தொகை 216 ஆக உயர்ந்தது. 1932 முடியவுள்ள ஐந்து வருஷ காலத்தில் மட்டும் புதிய ஆரோக்கிய விடுதிகளையும், ஓய்வு இல்லங்களையும் அமைக்க சமூக இன்ஷூரன்ஸ் நிதியிலிருந்து இருபத்திரண்டரைக் கோடி ரூபிளுக்கு மேல் செலவிடப்பட்டிருக்கிறது. இன்ஷூர் செய்துள்ளவர் தொகை 1936ல் 25,630,000.

## இளைஞர்கட்கு ஆலோசனை

ஸ்ரீ M. சின்னையா செட்டியார் எழுதிய சமூக சீர்திருத்த நூல். 40 அரிய கட்டுரைகள் அடங்கியது. 200 பக்கங்கள் கொண்டது.

விலை ரூபாய் ஒன்று. தபால் கூலி வேறு கிடைக்கு மிடங்கள்—

M. சின்னையா செட்டியார்,
மகிபாலன்பட்டி.

குமரன் ஆபீஸ், காரைக்குடி.

### ஒ. சிறுவயல்

7-3-39ல் இந்துஸ்த்தான் பாய்ஸ் ஸ்கௌட், நகரத்தார் குரூப் சாரணர்கள், மாத்தூர் 'கியாம்ப்'பில் வெள்ளி புகையிலை டப்பி ஒன்றும், வெள்ளி சாவிக் கோவை ஒன்றும் கண்டெடுத்ததாகவும் உரிமையாளர் அடையாளம் கூறி பெற்றுக்கொள்ளலாமென்றும் எழுதுகின்றனர்.

